# கல்கி

KALKI 13.6.93
ரூ. 3.00





கர்நாடக மாநிலச்
சிறப்பிதழ்

# டைட்டனின் மகத்துவம்



பரபரப்பூட்டும் அழகு; அகில உலகத்தரம்.



*சாசுவதம் பட்டுப்புடவையுடன் அணிய அழகிய வாட்ச் Rs. 2000.*

மனதில் பதிய வைக்கும் அழகை ஏற்படுத்த, நல்ல கவனம் தேவை. சாதாரண கவர்ச்சிக்கும் பரபரப்பூட்டும் அழகுக்கும் வேறுபாடு – நாம் கவனத்துடன் தேர்ந்தெடுக்கும் பொருளில்தான் இருக்கிறது. அதற்கு ஓர் எடுத்துக்காட்டு – டைட்டன் குவார்ட்ஸ்.

இன்றைய நவீன சர்வதேச வடிவங்களின் அணிவரிசையிலிருந்து உங்களுக்கு விருப்பமானதைத் தேர்ந்தெடுங்கள். இந்த அழகான கைக்கடிகாரங்களால் உங்கள் தோற்றம் தனித்தன்மையுடன் பிரகாசிக்கும்.

டைட்டனின் சிறப்புக்கு அதன் தோற்றம் மட்டுமல்ல – இன்னும் எத்தனையோ காரணங்கள். உலகின் மிகச்சிறந்த தொழிற்சாலைகள் ஒன்றில் உருவாகும் இவை. தரமான வேலைப்பாடு கொண்டவை. நம்பிக்கைக்குரிய டாட்டா முத்திரை பதித்தவை. அத்துடன் இரண்டு வருட உத்திரவாதம். 100–க்கு மேற்பட்ட மையங்களில் சேவை.

டைட்டன் குவார்ட்ஸ் அணியுங்கள். பரபரப்பான தோற்றத்தைப் பதிய வையுங்கள்.



*தேசிய பாரம்பரிய அழகான பளிச்சென்ற தூரணம் Rs. 1,250.*

**TITAN**
**QUARTZ**
**உண்மையிலேயே உலகத்தரம்**

# தோட்டங்களுக்கென்றே ஒரு மந்திரி!



எந்த மாநிலத்திலாவது தோட்டக் கலைக்கு என்று தனி அமைச்சர் இருப்பதாகக் கேள்விப்பட்டதுண்டா?

கர்நாடகாவில் இருக்கிறார் -

ஏ. கிருஷ்ணப்பா. தலைநகராகிய பெங்களூர் பூங்கா நகர் என்றே பெயர் பெற்றிருக்கும் போது தோட்டக்கலை தனிக் கவனமும் வளர்ச்சியும் பெற வேண்டும் என்ற அக்கறையுடன், முதல்வரே பார்த்துக் கொடுத்த தனிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு செயல்படுகிறார் அவர். தோட்டம் என்றால் பூந்தோட்டம் மட்டுமல்ல. காய்கறித் தோட்டங்களும், பழத் தோட்டங்களும் இந்த இலாக்காவைச் சேர்ந்தவை தாம்.

''இம் மூன்றுக்குமே தேவை நாளுக்கு நாள் அதிகரிக்கத்தான் செய்கிறது. ஏற்றுமதியிலும் நிறைய வாய்ப்பு. குறிப்பாகப் பதப்படுத்தப்பட்ட பழங்கள். நாங்கள் வகுத்துள்ள திட்டத்தில் ஷெட்யூல்ட் வகுப்பினர், பழங்குடியினர், பின்தங்கிய வகுப்பினர் என்று ஒரு பெரும் பகுதி மக்கள் பலன் அடைவார்கள். பத்து லட்சம் ஏக்கர் நிலத்தைத் தோட்டக் கலைச் செழிப்புக்கு என்று ஒதுக்கியிருக்கிறோம். இது தவிர, பனை எண்ணெய் (பாமாயில்) திட்டத்துக்கு இன்னொரு பத்து லட்சம் ஏக்கர் நிலம் ஒதுக்கி, ஏற்கெனவே 5000 ஏக்கரில் முதல் கட்டப் பணிகள் முடிந்து விட்டன. ஷிமோகாவில், தனியார் முதலீட்டுடன், மத்திய-மாநில நிதி மற்றும் தொழில்நுட்ப உதவிகளோடு தொழிற்சாலை உருவாகி வருகிறது.

''சொட்டு நீர்ப் பாசனம் இப்போது பிரபலமாகி வருகிறது. குறைந்த உழைப்பு, குறைந்த நீர்த் தேவை போதும். உரங்களையும், பூச்சிக்கொல்லி மருந்துகளையும் கூட, மத்திய - மாநில அரசுகள் கொடுத்து விடும். மத்திய அரசின் மான்யம் ஐம்பதாயிரம் ரூபாய் கிடைக்கும் விவசாயிகளுக்கு.

''கர்நாடகத்தில் நிறைய நீர்த் தேக்கங்கள் இருக்கின்றன. இவற்றையொட்டி, பூங்காக்களையும், தோட்டங்களையும் வளர்த்து சுற்றுச் சூழலில் குளுமையை உருவாக்கப் போகிறோம்.

''பெங்களூரில் மட்டும் 80 பூங்காக்கள் இருக்கின்றன. கப்பன் பூங்காவில் 2 கோடி ரூபாயில் இசை பொழியும் நீரூற்று நிறுவப் போகிறோம்.

''பூங்காக்கள் சட்டத்தின் கீழ், மாநிலத்தின் பெரிய பெரிய நகரங்கள் எல்லாவற்றிலுமே நிலத்தை ஆர்ஜிதம் செய்து பூந்தோட்டங்கள் அமைக்கவிருக்கிறோம். சுற்றுச் சூழலில் அக்கறை காட்டுவதாகப் பேசும் நாம், இதை முனைப்பாகச் செய்யா விட்டால் எப்படி?''

பெங்களூர் என்ன, கர்நாடகா மொத்தத்தையுமே பூங்கா மாநிலமாக்கி விடுவார்கள் போல!

- நம்பி

# மக்கள் மொழியில் மாக்பெத்!

கர்நாடகத்திலும் தமிழ்நாடு போலவே சினிமாவின் கோலோச்சல் நடந்த படிதான் இருக்கிறது என்றாலும் நாடகம் போன்ற நுண்கலைகள் இன்னும் முழுசாக நலிந்து விடவில்லை. ஆங்காங்கே, அவ்வப்போது, தரமான நாடகங்கள் அரங்கேறிய படியே இருக்கின்றன. அநேகமாக அத்தனை குழுக்களுமே அமெச்சூர் ரகம். நவீன நாடகம் என்றாலே நடையைக் கட்ட வைக்கும் பயமுறுத்தல்களும் இங்கு ஏதும் இல்லை!

காட்சி அமைப்புகளிலும், லைட்டிங் போன்ற தொழில்நுட்ப சமாசாரங்களிலும் மட்டுமே இங்கு 'நவீனம்' கையாளப்படுகிறது. வசனங்களில் வறட்டுத் தன்மை இல்லை. ஒரு பாமரக் கன்னடனின் 'புரிந்து கொள்ளும் திறமை'யைக் கருத்தில் கொண்டே வசனங்களை அமைக்கிறார்கள். உதாரணம் வேண்டுமெனில், 'ஜனபதா' குழுவின் ''மாபுநாயகன் சரிதம்''.

கர்நாடகாவில் நாடக ரசிகர்கள் நிறைய இருக்கிறார்களோ, இல்லையோ - நாடகத் தயாரிப்பாளர்கள் அநேகம். கிரிஷ் கர்னாட், கிரிஷ் காஸரவள்ளி, சுரேஷ் அங்கள்ளி, இக்பால் அகமது, பி. ஜெயஸ்ரீ நீனாஸம், ராஜேந்திர காரந்த... இவர்களெல்லாம் உருப்படியாக ஏதாவது செய்ய நினைக்கிறவர்கள்; செய்து வருகிறவர்கள்.

● மூக்கைத் துளைக்கும் கன்னட வாசனை...



● மைனா



ஷேக்ஸ்பியரின் மாக்பத்தைக் கன்னடத்தில் தழுவியிருக்கிறார்கள். மூலக் கதைதான் தழுவலே தவிர பாத்திரங்களிலும், காட்சிகளிலும், வசனத்திலும், பின்னணி இசையிலும் மூக்கைத் துளைக்கும் கன்னட வாசனை!

சினிமாவில் கலபமாய்ச் சாத்தியமாகிற சூப்பர் இம்போஸிங் டெக்னிக்குகளை சர்வ சாதாரணமாக மேடையில் காட்டிப் போகிறார்கள்!

எப்படி?

மணிரத்னம் படம் மாதிரி 'சக் சக்' என்று காட்சி மாற்றும் எடிட்டிங் ஜாலம் கண்முன் விரிகிறது!

எப்படி?

இப்படியான 'எப்படி'களுக்கு மேற்படி நாடக இயக்குனர் 'மைனா' சொல்லும் ஒரே பதில் ''அர்ப்பணிப்பு.''

**மை**னாவின் 'ஜனபதா' (மக்களின் மொழி) நவீன நாடகக் குழு ஆரம்பித்தது மே '90ல். இதுவரை ஐந்து நாடகங்கள் மேடையேற்றியிருக்கிறார்கள். வெறித்தனமான கலையார்வத்தால் சில நண்பர்களின் துணையுடன், கைக்காசைச் செலவு பண்ணி நாடகம் போடுகிறார். அவ்வப்போது இலவசக் காட்சிகள் வேறு!

மைனா சொல்கிறார் :

''சினிமாவை விடவும் மேடை நாடகம் என்கிற மீடியா அதிக சவால் வாய்ந்தது என்று கருதுகிறேன். நான் சொல்ல நினைக்கிற சிலவற்றைச் சரியான விதமாக வெளிப்படுத்த இந்த ஊடகம் பெரிதும் உதவுகிறது. மேடையில் நாடகம் நடத்துகையில் கிடைக்கிற சந்தோஷம் வேறு மீடியாவில் எனக்குக் கிடைக்கிறதில்லை.

''நாடகம் - ஒரு பொழுதுபோக்குச் சாதனம் என்பதை நான் மறுக்கிறேன். பார்க்கிறவர்களுக்கு ஒரு நல்ல பாதிப்பு ஏற்பட்டாலொழிய, நாடகம் போடுவதில் அர்த்தமில்லை. ஆனால் பெரும்பாலான மக்கள் 'பொழுதுபோக்கு' என்பதைத் தவிர வேறு எதையும் நாடகங்களில் எதிர்பார்க்கிறதில்லை. அதனால் இதுபோன்ற பரீட்சார்த்தமான முயற்சிகளுக்கு அனேகமாக யாரும் வருவதில்லை. இலவசமாகவாவது வந்து பாருங்கள் என்று கூப்பிட்டாலும் நிலையைப் பாருங்கள்...!''

அரங்கில் அதிகம் போனால் நூறு பேர்!

''முதலிலெல்லாம் ஆடியன்ஸ் இல்லாதது ரொம்ப வருத்தமாக இருந்தது. போகப் போக லிமிட்டட் ஆடியன்ஸ் என்றாலும் ஸ்டாண்டர்டாக இருக்கிறார்களே என்று ஒரு திருப்தி; சமாதானம். வேறு வழி?''

''ஆடியன்ஸின் ரசனையை மாற்ற நீங்கள் ஏன் முயற்சி செய்யக் கூடாது?''

''எந்த வகையில் முயற்சி செய்வது? தரமாகத் தருகிறோம். காண வந்தால்தானே டேஸ்ட் மாற்றம் பற்றி அவர்கள் யோசிக்கவாவது முடியும்?''

''இப்படி இலவசமாகவெல்லாம் நாடகம் போடுவதால் ஆகும் செலவை எப்படி ஈடுகட்டுகிறீர்கள்?''

''இதைச் சரிக்கட்ட முடியாது. நஷ்டம் என்று நினைக்காமல், ஒரு நல்ல காரியம் பண்ணுகிறோம் என்ற திருப்தியுடன் போக வேண்டியதுதான். ஆனால் ஒரு விஷயம். இந்த ஆடிட்டோரிய வாடகை (ரவீந்திர கலா நிலையம்) 500 ரூபாய்தான். அது ஒரு ஆறுதல். தவிர, நல்ல நாடகங்களுக்கு அரசு மானியம் கிடைக்கிறது. இதெல்லாம் போதுமான வருவாய் இல்லைதான். இருந்தாலும் இதுவாவது கிடைக்கிறதே என்கிற திருப்தி.''

''உங்கள் நவீன நாடகங்களுக்குத்தான் மக்கள் ஆதரவில்லையா, அல்லது மற்ற நாடகங்களுக்குமா?''

''வெறும் நகைச்சுவை நாடகங்களுக்கு - அவை எத்தனை மோசமாக இருந்தாலும் மகத்தான ஆதரவு இருக்கிறது!''

''கருத்துள்ள நகைச்சுவை நாடகங்களே வருவதில்லையா?''

''எப்போதாவது வரும். குறிப்பாக 'ராஜேந்திர காரந்த்'தின் நாடகங்களைச் சொல்லலாம். அவருடையவையெல்லாம் கண்ணியமான நகைச்சுவை.''

**மை**னாவின் 'ஜனபதா'வில் ஏழெட்டு பள்ளி மாணவர்கள் உட்பட சுமார் இருபது கலைஞர்கள் இருக்கிறார்கள். யாரும் நடிப்பு மூலம் 'வருமானம்' எதிர்பார்க்கிறவர்கள் அல்ல! நாடகம் முடிந்ததும் பஸ்ஸுக்கு 'சில்லறை' மட்டும் வாங்கிப் போவதைப் பார்க்க முடிந்தது. 'பரிவர்தனா', 'ஆத்ம நிவேதனம்' - என்ற இரு டீவி சீரியல்கள் செய்தது இவர்கள் சொல்லி மகிழும் விஷயம்.

தரமான நாடகங்கள் மட்டுமே தருவதன் மூலம் இன்றில்லாவிட்டாலும் ஒருநாள் - மக்கள் மத்தியில் பேசப்படும் குழுவாக வலம் வருவோம் என்கிற நம்பிக்கை இக்குழுவினர் ஒவ்வொருவரிடமும் இருப்பதை உணர முடிகிறது.

நாம் பார்த்த 'மார நாயக்கன் சரிதம்', (மேலட்டை வண்ணப் படம்) அதற்குக் கட்டியம் கூறுகிறது.

- ஆர்.பி.ஆர்.



# “மொய்லி அரசு வெறும் அறிவிப்புகளின் அரசு!”



ஹெக்டே தற்சமயம் வெறும் எம்.எல்.ஏ. தான். ஆனால் கர்நாடகத்தின் பிரதான எதிர்க் கட்சித் தலைவர்கள் முதற்கொண்டு ஜனதா தளத் தின் அகில இந்தியத் தலைவர் பொம்மை வரை சகலரும் ஹெக்டேவின் வீடு தேடி வந்து ஆலோ சனை கலக்கிறார்கள். இன்னமும் கர்நாடக மக்கள் மத்தியில் செல்வாக்கு மிகுந்த தலைவர் எனில், ஹெக்டேதான்.

**கேள்வி** : கர்நாடகத்தில் எதிர்க்கட்சிகள் எப்படி இருக்கின் றன?

**ஹெக்டே** : சட்டமன்றத்தை வைத்துப் பேசுவதாயிருந்தால் எண் ணிக்கையில் மிகவும் குறைச்சலா கத்தான் இருக்கிறோம். ஜனதா தளத்தில் 23 பேர், பி.ஜே.பியில் இரண்டு பேர், சமாஜ்வாடி ஜனதா தளத்தில் இரண்டு பேர்... இப்படி. ஆனால் வாங்கிய வோட்டுகளின் அடிப்படையில் பார்த்தால் - ஜனதா தளம், சமாஜ்வாடி ஜனதா இந்த இரண்டு கட்சிகளின் வோட் டுகளையும் கூட்டிப் பார்த்தால் - காங்கிரஸை விடவும் அதிகம். எஸ்.ஜே.பி, ஜனதாதள் என்றெல் லாம் பிரியாமல் தேர்தலைச் சந் தித்திருந்தோமானால் நிச்சயம் காங்கிரஸைத் தோற்கடித்திருப் போம்.

**கேள்வி** : வீரப்ப மொய்லி அரசாங்கத்தில் நீங்கள் என்ன குறைபாடுகளைக் காண்கிறீர்கள்?

**ஹெக்டே** : மொய்லி ஆட் சிக்கு வந்து ஆறு மாதங்களாகப் போகின்றன. இன்னமும் செய லாற்றவே ஆரம்பிக்கவில்லை. அவர்பாட்டுக்கு அறிவிப்புகளைச் செய்து கொண்டே போகிறார். நடைமுறைக்கு எதுவும் வந்ததாகக் காணோம். இந்த அரசை 'அறி விப்புகளின் அரசாங்கம்' - என்று சொல்லலாம். தவிர அவர் எப்போ தும் டூரிலேயே இருக்கிறார். அத னால் அரசாங்கத்தின் செயல்பாடு கள் துவங்கப்படாமலேயே நிற் கின்றன.

**கேள்வி** : பங்காரப்பா அர சாங்கத்திற்கும் மொய்லி அரசாங் கத்திற்கும் என்ன வேறுபாடு களைக் காண்கிறீர்கள்?

**ஹெக்டே** : பங்காரப்பா அர சைப் போன்ற ஓர் ஊழல் அரசை தேசம் இதுவரை கண்டதில்லை. மொத்த இந்தியாவிலேயே மோச

மான அரசாங்கத்தை நடத்தியவர் பங்காரப்பாதான். மொய்லி அப்படிப்பட்டவரல்ல... 'நல்ல அரசைத் தருவேன்' என்ற வாக்குறுதியுடன் ஆரம்பித்திருக்கிறார். போகப் போகப் பார்க்கலாம்...

**கேள்வி** : நல்ல அறிகுறிகள் ஏதும் உங்களுக்குத் தெரிகிறதா?

**ஹெக்டே** : ஆரம்பத்தில் சில நல்ல நடவடிக்கைகளை அவர் எடுத்தார். நேர்மையான அதிகாரிகளைச் சரியான பதவிகளில் நியமித்தார். திறமையும் கண்டிப்பும் கொண்ட அதிகாரிகள் சுதந்திரமாய்ச் செயல்பட வழியமைத்துக் கொடுத்தார். ஆனால் திடீரென்று நிர்வாகத்தைச் சுத்தம் செய்யும் நடவடிக்கைகளை அவர் குறைத்துக் கொண்டது ஏனென்று தெரியவில்லை. பஞ்சாயத்துராஜ் சட்டத்தின்படி மக்கள் பிரதிநிதிகளை விடவும் அரசு அதிகாரிகளுக்கு அதிக அதிகாரம் தரும் முடிவை மொய்லி எடுத்தது சரியானதாகப்படவில்லை. மேலும், பங்காரப்பா அரசாங்கத்தின் பல ஊழல் வழக்குகளை - ஒவ்வொன்றும் கோடிக்கணக்கான ரூபாய் சம்பந்தப்பட்டவை - சி.பி.ஐ.யிடம் ஒப்படைத்திருக்க வேண்டும். அதைச் செய்யத் தவறி விட்டார்.

**கே** : ஜனதா தளத்தின் செயல்பாடுகளிலும் தலைமையிடத்திலும் நீங்கள் அதிருப்தி அடைந்தது போல் காணப்படுகிறீர்களே... தேவேகௌடாவுடன் இணைந்து மாநிலக் கட்சி ஒன்றைத் துவங்கப் போவதாகக் கூட ஒரு செய்தி வலம் வருகிறதே?

**ஹெக்டே** : அப்படியில்லை. இது பற்றிய தீர்மானமான முடிவுக்கு நான் இன்னமும் வரவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். என்னுடைய முதல் முயற்சி, நான்கு கூறுகளாகப் பிளவுபட்டிருக்கும் ஜனதா தளத்தை ஒன்றாக இணைப்பதுதான். என்னுடைய முயற்சிக்கு ஆரம்பம் பிரமாதமாக இருந்தது. ஆனால் எங்கள் கட்சியிலிருக்கும் சிலர் அவசரப்பட்டு, சகட்டுமேனிக்கு அறிக்கைகள் விட ஆரம்பிக்கவே, அந்த முயற்சியில் நிறைய முட்டுக்கட்டைகள் விழுந்து விட்டன. இருந்தாலும் நான் என்னுடைய முயற்சிகளைக் கைவிடாமல்தான் இருக்கிறேன். இதோ... இப்போது கூட இது விஷயமாகத்தான் டெல்லிக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். இந்த விஷயத்தில் அநேகமாய் இதுதான் என்னுடைய கடைசி முயற்சியாக இருக்கும். எல்லாரையும் ஒன்று சேர்க்க முயற்சி செய்வேன். இந்த முயற்சி தோல்வியடைந்தால் கர்நாடகத்தில் மட்டுமாவது சமாஜ்வாடி கட்சியையும் ஜனதா தளத்தையும் இணைக்க முயல்வேன். அதுவும் தோல்வியுற்றதெனில் மாநிலக் கட்சி ஆரம்பிக்க வேண்டியதுதான்... வேறு வழியில்லை.

**கேள்வி** : நீங்கள் அகில இந்திய அளவில் ஒரு தேசியத் தலைவர். கர்நாடகத்திலிருந்து தேசிய அளவில் தலைவராகக் கருதப்படும் உங்களைப் போன்றவர்கள் மாநிலக் கட்சி என்ற அளவில் குறுகிய நோக்கத்துடன் அரசியல் செய்ய முன்வருவது சரியானது என்று கருதுகிறீர்களா?

**ஹெக்டே** : பிஜூ பட்நாயக்கும், ஒரு தேசியத் தலைவர்தான். அவர் 'காலிங்கா'வை மாநில அளவில் துவங்கவில்லையா? சில நேரங்களில் இம்மாதிரியான 'தாற்காலிக முகங்களை' தேசத்துக்குக் காட்ட வேண்டியது அவசியமாகி விடுகிறது. இதனால் தேசியத் தலைவர் என்ற இமேஜ் பாதிக்கப்படும் என்று நான் கருதவில்லை. தவிர மாநிலத்தின் நலன்தான் முக்கியம். தனிப்பட்ட இமேஜ்... செல்வாக்கு இதெல்லாம் இரண்டாம்பட்சம்தான். நான்கைந்து ஆண்டுகளாக காங்கிரஸ் கட்சி மாநிலத்தையே பாழ்படுத்தி வைத்திருக்கிறது. எந்தத் துறையிலும் வளர்ச்சி என்பதே இல்லாமல் போய் விட்டது. காங்கிரஸில் மூன்று முதல்வர்கள் வந்து விட்டார்கள். இந்த முதல்வர்களும் சரி; மற்ற அமைச்சர்களும் சரி போதுமான அளவு சுரண்டி விட்டார்கள். அதனால் மாநில அளவில் சில முடிவுகள் எடுக்க வேண்டியிருக்கிறது.

**"மொய்லி எப்போதும் டூரிலேயே இருக்கிறார். அதனால் அரசாங்கத்தின் செயல்பாடுகள் துவங்கப்படாமலேயே நிற்கின்றன."**
**- ஹெக்டே**



அடுத்த இதழில்....

**●● பெண்கள் கால்பந்து : கொடுங்கள் ஆதரவு!**

**●● பழகும் விதத்தில் பாதி வெற்றி!**
- ஒலியர் ஸ்வாமின் வாழ்க்கைக் கதை!

**●● மற்றும் சில கர்நாடகச் செய்திகள்**



புது கிளார்க் : இந்த ஃபைல்ல கையெழுத்துப் போடுங்க சார்!

மானேஜர் : கூடவா? ஊடவா?

புது கிளார்க் : என்ன சார் சொல் றீங்க?

மானேஜர் : கவர் உண்டா கிடையா தான்னு கேட்டேன்!

- பி.ஜி.பி. இசக்கி

---

**கேள்வி :** காவிரி பிரச்னையில் உங்கள் நிலை என்ன? நடுவர் மன்றத் தீர்ப்பை அரசாங்கம் அமல்படுத்தாமல் இருப்பது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

**ஹெக்டே :** நடுவர் மன்றத்தின் இடைக்கால தீர்ப்பு என்பது ஃபைனல் ஜட்ஜ்மெண்ட் அல்ல. ஓர் இடைக்கால ஏற்பாடுதான். இந்த இடைக்கால உத்தரவை அப்படியே அமல்படுத்துவதில் பல்வேறு நடைமுறைச் சிக்கல்கள் உள்ளன. உதாரணமாக தமிழ்நாட்டிற்கு இத்தனை கன அடி தண்ணீர் திறந்து விட வேண்டும் என்ற ஷரத்து இருக்கிறது. 'இவ்வளவு தண்ணீர் இருந்தால் இவ்வளவு கன அடி' - என்பது போல் நடைமுறை விளக்கங்கள் இல்லை. இத்தனை மாதங்களில் இவ்வளவு தண்ணீர் என்ற 'காலக்கெடு' மாத்திரம்தான் உள்ளது. ஒருவேளை மழை இல்லாமல் காவிரியில் தண்ணீரே இல்லை என்றால் கூட கர்நாடகம் தண்ணீரை 'உற்பத்தி' செய்து தமிழ் நாட்டுக்குத் தர வேண்டும் என்று அர்த்தமாகிறது. இதுபோன்ற நடைமுறைக்கு ஒத்து வராத சில உத்தரவுகள் இருக்கின்றன... காவிரிப் பிரச்னை என்பது ஒரு சென்ஸிடிவ் பிரச்னை. இதில் இரண்டு பக்கங்களும் நியாயம் பெறுதல் வேண்டும். காவிரியால் இரண்டு மாநில விவசாயிகளும் நன்மை அடைய வேண்டும். காவிரி ஆற்றின் ஒரு துளி தண்ணீர் கூட வீணடிக்கப்படக் கூடாது என்பதுதான் என்னுடைய கருத்தும்.

**கேள்வி :** உங்களுக்கும் முன்னாள் பிரதமர் சந்திரசேகருக்கும் இப்போது உறவு எப்படியுள்ளது?

**ஹெக்டே :** சுமுகமாகவே உள்ளது...

**கேள்வி :** வி.பி. சிங்குடன்...?

**ஹெக்டே :** அவருடனும் சுமுகமான உறவுதான். நாங்கள் நல்ல நண்பர்களாகத்தான் பழகுகிறோம்.

**கேள்வி:** சுப்பிரமணியசுவாமியுடன்....?

**ஹெக்டே :** என்ன கேட்டீர்கள்...?

**கேள்வி :** சுப்பிரமணியசுவாமியுடன்...

**ஹெக்டே :** நான் அவர் பற்றி எதுவும் கருத்துக் கூற விரும்பவில்லை... ஏன், என்னுடைய வீட்டு நாய் கூட அவரைப் பார்த்துக் குரைக்காது. அவரைப் பார்த்துக் குரைத்தால் தன்னுடைய கௌரவத்துக்கு இழுக்கென்று நினைத்துப் பேசாமல் இருந்துவிடும். அவர் இருக்க வேண்டிய இடம் ராஞ்சி. ராஞ்சியில்தான் மனநல மருத்துவமனை உள்ளது.

**கேள்வி :** இதை அப்படியே வெளியிடலாமா?

**ஹெக்டே :** தாராளமாய் வெளியிடுங்கள்.

**கேள்வி :** சமீபத்தில் வெளியான சில நீதிமன்றத் தீர்ப்புக்கள் நீங்கள் ஆட்சியிலிருந்தபோது எடுத்த முடிவுகளுக்கு எதிரானதாகவே உள்ளன. இந்தத் தீர்ப்புக்கள் உங்கள் இமேஜைப் பாதித்திருக்கிறதா?

**ஹெக்டே :** என்னுடைய பெயரை சம்பந்தப்படுத்தி, தேவையில்லாத விளம்பரம் கொடுக்கப்பட்டு விட்டது. ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் என்னுடைய மருமகனுடைய உறவினர் சம்பந்தப்பட்டிருக்கிறார் என்பது நான் சம்பந்தப்பட்டதாக ஆகாது. என்னுடைய மருமகனின் உறவினர் என்னுடைய உறவினர் அல்ல. கட்டடங்கள் கட்ட கொடுக்கப்பட்ட அனுமதி என்னுடைய அரசில் நான் கொண்டு வந்த சட்டம் அல்ல. 1976- முதலே இம்மாதிரி அனுமதிகள் கொடுக்கப்பட்டு வந்திருக்கின்றன. கர்நாடகத்தில் மட்டுமல்ல - இந்தியா பூராவிலும் கொடுக்கப்பட்டுள்ளன. கர்நாடகத்தை மட்டும் எடுத்துக் கொண்டால் ஆயிரத்திற்கும் மேற்பட்ட கேஸ்களில் இதே போன்ற அனுமதிகள் தரப்பட்டுள்ளன. சுப்ரீம் கோர்ட் என்ன சொல்லியிருக்கிறதென்றால் 'செக்ஷன் இருபத்தாறு' மொத்தமும் தவறு என்கிறது. இது எல்லா மாநிலங்களுக்கும் பொருந்துகிற தீர்ப்புத்தான். இந்த விஷயமாய் நான் தவறு செய்தேன் என்றோ, சலுகை காட்டினேன் என்றோ அதிகார துஷ்பிரயோகம் செய்தேன் என்றோ கோர்ட் தீர்ப்பு என்னைக் குற்றம் சொல்லவில்லை. அந்த செக்ஷன் தவறு.. அவ்வளவுதான்.

**கேள்வி :** நரசிம்மராவ் ஆட்சிக்கு வந்தவுடன் அவருக்கு ஆதரவான கருத்தைச் சொன்னீர்கள். அவர் மீது உங்களுக்கு ஒரு Soft Corner இருந்தது போன்ற நிலைப்பாடு கொண்டவராயிருந்தீர்கள். இப்போதும் அதே கருத்துத்தானா... அல்லது உங்கள் எண்ணத்தை மாற்றிக் கொண்டீர்களா?

**ஹெக்டே :** நரசிம்மராவ் ஆட்சிக்கு வந்தவுடன் நான் அவரை மானசீகமாக நம்பினேன். காங்கிரஸைப் பரிசுத்தப்படுத்துவார்... இழந்து விட்ட மரியாதையையும் பெருமைகளையும் மீட்டுத் தருவார் என்று எதிர்பார்த்தேன். லட்சிய அரசியல் நடத்து

வார் என்று எண்ணிவேன். ஆனால் என்னுடைய நம்பிக்கைகள் அத்தனையும் பொய்த்து விட்டன. நரசிம்மராவ் எல்லாவற்றிலும் தோல்விகளைத்தான் தழுவிக் கொண்டிருக்கிறார்.

**கேள்வி :** பாரதிய ஜனதா கட்சியைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்...? குறிப்பாக சமீபகாலமாய் அவர்களின் வேகமான வளர்ச்சி பற்றி...

**ஹெக்டே :** பாரதிய ஜனதாக் கட்சி தனிப்பட்ட கட்சியாய் - சுதந்திரமான கட்சியாய் இல்லை. பஜ்ரங் தள்ளிடமும், விஸ்வ ஹிந்து பரிஷத்திடமும் சிக்கிக் கொண்டு தவிக்கிற கட்சியாகத்தான் இருக்கிறது. இந்த இரண்டு கட்சிகளும் சேர்ந்து பாரதிய ஜனதாவுக்கு ஒரிஜினாலிடி இல்லாமல் செய்து விடும் சக்தி படைத்தவை. இவர்களின் பிடியில் சிக்கிக் கொண்டிருக்கும் பாரதிய ஜனதா மதவாதக் கட்சியாக மட்டும்தான் இருக்க முடியும். மதத் தீவிரவாதம் என்பது இந்தியாவைச் சிதறடித்து விடும். இந்தியா வாழ வேண்டுமெனில் மதச்சார்பற்ற நாடாக இருந்தால்தான் முடியும்.

**கேள்வி :** நேற்று நாங்கள் உங்களைச் சந்திக்க வந்த போது, நீங்கள், பொம்மை, சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவர் தேஷ்பாண்டே, ஜே. எச். பட்டேல், சந்திரேகௌடா, நாணையா... என்று இன்னும் பல வேறு தலைவர்கள் சேர்ந்து உங்கள் உட்கட்சி விவகாரங்களைக் காரசாரமாக விவாதித்துக் கொண்டிருந்தீர்கள்... நிறைய கருத்து மோதல்கள் வந்தன. பத்திரிகைக்காரர்களான எங்களைப் பக்கத்திலேயே உட்கார வைத்துக் கொண்டு நீங்கள் விவாதங்களில் ஈடுபட்டீர்கள். உங்கள் உள்கட்சி விவகாரங்கள் பத்திரிகைக்காரர்களான எங்களுக்குத் தெரிவது பற்றி நீங்கள் பயப்படவில்லையா?

**ஹெக்டே :** (சிரிக்கிறார்) இதில் மறைக்கவோ, பயப்படவோ என்ன இருக்கிறது? அரசியல் என்பதே பொது வாழ்க்கை சம்பந்தப்பட்டதுதானே? பொதுவான ஒரு விஷயம் பற்றிப் பேசும் போது பத்திரிகைக்காரர்களிடம் மறைக்க என்ன இருக்கிறது? எதுவும் மறைக்கப்படக் கூடாது என்று நினைக்கிறவன் நான்...

**கேள்வி :** உங்கள் வாழ்க்கை அனுபவங்களைப் புத்தகமாக எழுதப் போவதாகக் கேள்விப்பட்டோம். பல பேருடைய வாழ்க்கை அனுபவங்கள் போல் பத்தோடு பதினொன்றாக இருக்குமா அல்லது அரசியல் சூறாவளி எதையும் ஏற்படுத்துமா?

**ஹெக்டே :** நான் என்னைப் பற்றி எப்படிக் கடுமையாக எனக்கு நானே விமர்சனம் பண்ணிக் கொண்டிருக்கிறேனோ அதே போல் மற்ற அரசியல் தலைவர்கள் பற்றியும் வெளிப்படையாகவும் கடுமையாகவுமே விமர்சனம் செய்திருக்கிறேன். அது அரசியல் சூறாவளி எதையும் கிளப்புமா என்பது புத்தகம் வெளிவந்த பிறகுதான் தெரியும்... புத்தகத்தை இப்போதுதானே எழுத ஆரம்பித்திருக்கிறேன்.

**கேள்வி :** கடைசியாக ஒரு கேள்வி. நீங்கள் சமீபத்தில் ஒரு கன்னட சினிமாவில் நடித்தீர்கள்... அந்த அனுபவம் எப்படி? திரைப்பட அனுபவம் தோல்வியா அல்லது வெற்றியா?

**ஹெக்டே :** என்ன இப்படிக் கேட்டு விட்டீர்கள்! அந்தப் படத்தில் நடித்ததற்காக எனக்குச் சிறந்த நடிகருக்கான அவார்டே கிடைத்தது. ஹப்ளியிலும் வேறு சில சென்டர்களிலும் 'மரணமிருதுங்கா' நூறு நாட்களைத் தாண்டி ஓடியது. பெங்களூரில் ஒரே நேரத்தில் முப்பத்து நான்கு தியேட்டர்களில் திரையிட்டார்கள். அத்தனை தியேட்டர்களிலும் பத்து நாட்கள் ஓடிற்று. படம் பார்க்க வந்தவர்கள் என்னுடைய போர்ஷன் முடிந்ததும் தியேட்டரை விட்டுப் போய் விட்டார்கள் என்ற அளவுக்கு என்னைப் பொறுத்தவரை அந்தப் படம் சக்ஸஸ்தான். இதுபோல என்னுடைய மனதுக்குப் பிடித்தமான வேறு ரோல்கள் வந்தால் தொடர்ந்து படங்களில் நடிக்கலாமென்றே இருக்கிறேன்.

**சந்திப்பு : அமுதவன்**

---

## எழுத்தாளர்களே, நினைவூட்டுகிறோம்!





அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி (93)க்கான முடிவு தேதி, இந்த மாதம் 15 - ஆம் தேதிதான் என்பது நினைவிருக்கிறதல்லவா!

உடனடியாக அனுப்பி வையுங்கள். முழு விவரம் வேண்டுவோர் சென்ற வாரக் கல்கி இதழைப் பாருங்கள்.

- ஆசிரியர்

# தோண்டப்படாத சாலைகளும் வேண்டப்படாமலே வேலைகளும்!



● மஞ்சுளா

முதல் வாரம் ரோட்டுக்குத் தார் போட்டால், அடுத்த வாரமே மெட்ரோ வாட்டர்காரர்கள் வந்து தோண்ட வேண்டும். மறுவாரம் டெலிபோன் துறை தோண்டியது போக, மிச்சம் மீதி ஏதாவது இருந்தால் அதையும் மின்சாரத் துறையினர் வந்து பிறாண்டி விட்டுச் செல்ல வேண்டும். இது தானே காலங்காலமாக நாமெல்லாம் கண்டு வரும் நடைமுறை?

பெங்களூரில் எல்லாமே தலைகீழ்! கர்ப்பவதிகளெல்லாம் ஆஸ்பத்திரிக்குத் தான் போயாக வேண்டும். நம்ம ஊர் மாதிரி குண்டும் குழியுமான ரோடுகளில் பிரயாணம் செய்யும் போது குலுக்கும் குலுக்கலிலேயே பிரசவித்துச் செலவுகளை மிச்சப் படுத்த முடியாது. துடைத்து விட்ட மாதிரி அப்படியொரு நறுவிசு!

பெங்களூர் கார்ப்பரேஷனுக்கு மட்டும் இதெல்லாம் எப்படி சாத்தியமாகிறது? துணை மேயர் திருமதி மஞ்சுளாவைச் (மேலட்டை வண்ணப்படம்) சந்தித்து நேரடியாகவே கேட்டோம்.

"முதலில் ஒரு ரோட்டுக்குத் தார் போட முடிவு செய்தால் அதை உடனடியாக டெலிபோன் துறை, வாட்டர் போர்டு, மின்துறை என்று சம்பந்தப்பட்ட அனைவருக்கும் தெரிவித்து, 'உங்கள் வேலை ஏதாவது அந்தப் பகுதியில் பாக்கியிருந்தால் அதை இந்தத் தேதிக்குள் முடித்து எங்களுக்கு ஒத்துழைப்புத் தாருங்கள்' என்று தெரிவிப்போம். அவர்களும் தங்கள் வேலைகளை முடித்து விட்டு எங்களுக்குத் தெரிவிப்பார்கள். அதன் பிறகு நாங்கள் தார் போடுவோம். இப்படிச் செய்வதால் ரோடுகள் பாழாவதில்லை."

"ஒருவேளை நீங்கள் தார் போட்ட பிறகு மற்ற துறையினர் தோண்ட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால் என்ன செய்வது?"

"வேறு வழியில்லை; தோண்டுவதற்கு நாங்கள் அனுமதி கொடுத்துத்தான் ஆக வேண்டும். ஆனால், அவர்கள் தோண்டுவதால் அந்தத் தெருவையோ சாலையையோ மீண்டும் சீர்படுத்த வேண்டுமல்லவா! அதற்கான செலவை அவர்களிடமிருந்து வசூலித்து விடுவோம். அதனால் யாரும் அனாவசியமாகத் தோண்ட மாட்டார்கள்."

"இங்குள்ள எல்லாத் தெருக்களும் சுத்தமாகப் பளிச்சென்று இருக்கின்றனவே,

எப்படிப் பராமரிக்கிறீர்கள்?''

''எல்லாத் தெருக்களையும் தினந் தோறும் சுத்தம் செய்கிறோம். மார்க்கெட் பகுதிகள் என்றால் காலை, மாலை ஆகிய இரு வேளைகளிலும் சுத்தம் செய்கிறோம். இதோடு 'இன்டென்ஸிவ் கிளீனிங்' என்றும் ஒரு முறை வைத்திருக்கிறோம். அதாவது, ஒவ்வொரு சனிக்கிழமையும் ஒவ்வொரு எம்.எல்.ஏ. தொகுதியைச் சிறப்புக் கவனம் எடுத்துச் சுத்தம் செய்யும் முறை. அப்போது, அந்தந்த தொகுதி எம்.எல்.ஏக்கள், கவுன்சிலர்கள் ஆகி யோரும் உடனிருப்பார்கள். எங்கள் அதி காரிகளும் இருப்பார்கள். அதனால் எந்த இடமும் விட்டுப் போகாமல் சுத்தம் செய்ய முடிகிறது.''

''இத்தனையும் செய்வதற்கு கார்ப்ப ரேஷனில் நிதி வசதி இருக்கிறதா?''

''இங்கு யாரும் வரி ஏய்ப்புச் செய்ய முடியாது. பெங்களூர் நகரைப் பொருத்த வரை - அதுவொரு குடிசையாக இருந்தா லும் சரி - குறைந்தபட்ச வரி ரூபாய் 367 கட்டித்தான் ஆக வேண்டும்; இதில் யாருக் கும் பாரபட்சமே கிடையாது. இப்படி வரி வசூலிக்கும் போது, மக்களுக்கும் அதற்குத் தகுந்தபடி வசதிகள் செய்து தந்துதானே ஆக வேண்டும். மக்களுக்கான அடிப்படை வசதிகளை எப்படி மறுக்க முடியும்?'' என்று கூறிய துணை மேயர் மஞ்களா இன் னொன்றையும் சொன்னார்.

அதுதான் பெண்களுக்கான வேலை வாய்ப்பு. பெங்களூரிலுள்ள கார்ப்பரேஷன் பள்ளிக்கூட மாணவ, மாணவியருக்குச் சீருடைகள் வேண்டுமல்லவா? அதை கார்ப் பரேஷன் மூலமே தைத்து வழங்குகிறார் கள். அதனால், பல பெண்களுக்கு வேலை வாய்ப்புக் கிடைக்கிறது.

''இது முதற்கட்டப் பணிதான். இன்னும் இதுபோல் நிறையத் திட்டங்கள் தீட்டி, பலருக்கும் வேலை வாய்ப்பு அளிக்க இருக்கிறோம்!'' என்றார் மஞ்களா.

ஆக, மக்கள் பிரதிநிதிகள் யோக்கிய மாகச் செயல்பட்டால் எவ்வளவோ செய்ய லாம்! அப்படிப்பட்ட சிலரேனும் தேர்ந் தெடுக்கப்பட்டு விடக் கூடாது என்பதற் காகத்தான் நம்ம ஊரில் கார்ப்பரேஷன் தேர் தல்களைத் தள்ளிப் போட்டுக் கொண்டே வருகிறார்கள் போலிருக்கிறது!

- பிரின்ஸ்



என்ன, பிறந்த
நாள் கொண்டாடின
சங்கதியையே
காணோம்,
என்னடோ
சீரியஸ்ஸா
ஆராய்ச்சி
பண்ணிகிட்டி-
ருக்கீங்க?
எழுபது
வயசுக்கு
மேலே
யார் யாரு,
எந்த எந்த
மாநிலத்திலே,
எப்ப எப்ப,
முதலமைச்சரா
இருந்திருக்
காங்கன்னுதான்
....
மக்களின்
நம்பிக்கை
ம்,ம்...மடமடன்னு ரிராக்கைக் கிளியர்
பண்ணுங்க. விபத்து நடக்கப் போற
அடுத்த இடத்துக்கு கிரேன்களைக்
கொண்டு போகணுமே!...
ஜாபர்
ஷெரீப்...
இதோ,
நானும்
வந்துட்டேன்,
பிரமாதமா
குட்டை
குழப்புவேன்!
சந்திர
சுவாமி
இ. காங்.
பி.ஜே.பி.
இந்து
தீவிரவாதிகள்
முஸ்லீம் தீவிரவாதிகள்
அயோத்தி பிரச்னை



கல்கி

1993
ஜூன் 13
மலர் : 51
இதழ் : 46
ஸ்ரீமுக
வைகாசி 31



# ஐயோ பாவம், மொய்லி!

என்னமோ போங்கள், கர்நாடகா முதல்வர் மொய்லியை எண்ணினால் பரிதாபமாகத்தான் இருக்கிறது. ஓர் ஆர்ப்பாட்டம் உண்டா, பரபரப்பு உண்டா, மத்திய அமைச்சருடன் வாக்குவாதம் உண்டா, எதிர்க்கட்சியின ருடன் நேரடி மோதல் உண்டா... ஒன்றும் இல்லை! கேவலம் ஒரு கட்-அவுட் கூட இல்லை! பிழைக்கத் தெரியாத மனுஷனாய் இருக்கிறார்.

"மொய்லி சதா ட்ரோடிக்கிறார்; அலுவலகத்தில் வீட்டில் உட்காருவதே இல்லை; ஃபைல் பார்ப்பதில்லை" என்று ஹைகமாண்டிடம் குற்றம் சாட்டும் அள வுக்கு இன்று சேலம், நாளை அமேதி, அப்புறம் தில்லி, பிறகு பெங்களூர் என்று ஒரே சுறுசுறுப்பு. ஒரு கட்டிங் பண்ணை டயுள் ரத்து கூடப் பண்ணத் தெரிய வில்லை மனுஷனுக்கு. என்ன முதல்வர் போங்கள்!

அக்கிரமம்! அமைச்சர்களையெல்லாம் நிஜமாகவே ஆள விடுகிறார்! பாருங்கள், கர்நாடக தொழில் - வர்த்தக சபைத் தலைவர், "எங்களையெல் லாம் ஒரு குழுவாக குஜராத்துக்கு மொய்லி அழைத்துப் போகப் போகிறார்" என்று நமக்குப் பேட்டி தருகிறார். அடுத்தாற்போல் தொழில் மந்திரியோ "நான்தான் அழைத்துப் போகப் போகிறேன்; குஜராத்தை வெல்கிற மாதிரி கர்நாடகத்தில் தொழில்வளம் பெருகச் செய்வேன்' என்று பேட்டியளிக் கிறார். என்ன தைரியம்! 'எல்லாம் முதல்வர் போட்ட பிச்சை' என்று சொல்வதை விட்டு... இப்படியா!

பெங்களூர் டெபுடி மேயராம். தொழில் மந்திரி போல இவரும் பெண் மணிதான். பெங்களூரின் சுத்தம், சுகாதாரம் பற்றி ரொம்பத்தான் பெருமை யடித்துக் கொள்கிறார். என்னதான் சொல்லுங்கள், குப்பைமேடுகளுக்கு இடையில் மூக்கைப் பிடித்துக் கொண்டு குண்டும் குழியுமான சாலைகளில் விழுந்து எழுந்து போவதில் உள்ள வீரம் அங்கே கர்நாடக மக்களுக்கு உண்டா? மைசூரில் ஒரு ஜனதாதள மேயர் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் பாதக மில்லை, உள்ளாட்சித் தேர்தல்களும் மேயர் தேர்தல்களும் ஒழுங்காக நடக்க வேண்டும் என்ற அசட்டுப் பிடிவாதத்தை என்னவென்று சொல்வது!

விவசாயத்துக்கு ஒரு மந்திரியாம்; தோட்டங்களுக்குத் தனி மந்திரியாம்! இப்படி தொழிலுக்கும் விவசாயத்துக்கும் முக்கியத்துவம் தந்தால் மாநிலம் முன்னேறி விடாதோ? அரசியல்வாதி மட்டும்தான் செழிக்க வேண்டும், நாடு அல்ல என்ற அரசியல் அரிச்சுவடி கூடத் தெரியாமல் ஒரு முதல்வரா!

டூரிசம் மந்திரியாம்; 'அதை சாதிக்கப் போகிறேன் இதை நிறைவேற்றப் போகிறேன்' என்று தமது பேட்டியில் அடுக்குகிறார். முதலில் யோக்கியமாக நடந்து கொள்ளும் கன்னட ஆட்டோ டிரைவர்களுக்கு தில்லுமுல்லு கற்றுத் தரட்டும். அப்போதானே கர்நாடகாவில் பார்த்த அழகுகளையெல்லாம் மறந்து விட்டு, ஏமாற்றப்பட்ட கதைகளை மட்டுமே, திரும்பி ஊர் போய்ச் சேரும் சுற்றுலாப் பயணிகள் சுவாரஸ்யமாகப் பேசி பொழுதைக் கழிக்க முடியும்!

வேறொன்றும் முடியாவிட்டாலும் பங்காரப்பா விஷயத்திலாவது மொய்லி மல்லுக்கு நின்று ஒரு பரபரப்பை ஏற்படுத்தப் பார்க்கலாம். ஆனால் நடப்பது என்ன? "மொய்லி காழ்ப்புணர்ச்சி கொண்டு என்னைத் தீர்த்துக் கட்டப் பார்க்கிறார்" என்று பங்காரப்பா அலறினால் கூட, இந்த மகானு பாவன் அலட்டிக் கொள்வதில்லை. "பங்காரப்பா பேச்சு துரதிர்ஷ்டவச மானது; எனக்கு அப்படியெல்லாம் எண்ணமில்லை. ஆனால் சட்டம் தன் பணி யைச் செய்யும்" என்று சாதுவாகப் பதில் அளிக்கிறார்.

இதெல்லாம் கிடக்கட்டும். வீரப்பனைப் பிடிக்கும் விஷயத்திலாவது கொஞ்சம் வீரம் காட்டக் கூடாதோ? "கர்நாடகா போலீஸே ஒரு கை பார்க் கும்" என்று மார்தட்டாமல், "எல்லைப் பாதுகாப்புப் படையை உதவிக்கு அனுப்புங்கள்" என்று யதார்த்தமாகச் சிந்தித்து, மத்திய அரசுக்குக் கோரிக்கை விடுக்கிறார்.

பாவம் மொய்லி, உண்மையிலேயே அவரை நினைத்தால் பரிதாபமாகத் தான் இருக்கிறது.

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.



M. சுந்தரேசன், International Freelance Journalist and முன்னாள் Special Correspondent of P.T.I. - Bombay அவர்கள், 7.4.93 அன்று தமது இல்லத்தில் திடீரென்று காலமானார். இவர், பாட்னா ஆங்கில பத்திரிகை The 'Searchlight' டின் ஆசிரியராக இருந்த லேட். M.S.M. சர்மாவின் ஒரே புதல்வர்.

சுந்தரேசன் தன்னுடைய எழுத்தின் மூலம் அன்னிய நாட்டினருக்கு, நம் நாட்டைப் பற்றி உயர்ந்த, உன்னத எண்ணத்தை ஏற்படுத்தியிருக்கிறார்.

அன்னாருக்கு இரு மகன்கள், மருமகள்கள், பேரக் குழந்தைகள் உள்ளார்கள்.

ADVT



# கம்பராமாயணம்

## விளக்கஉரை

## இணையற்ற இலக்கிய விருந்து.

கோவை கம்பன் ட்ரஸ்ட் தலைவர் கம்பன் அறநெறிச் செம்மல்

**திரு. ஜி.கே.சுந்தரம்** அவர்களின் ஆதரவுடன் தலைசிறந்த தமிழ்ப் பேரறிஞர்களின் முயற்சியால் கம்பராமாயணத்துக்குப் புதிய விளக்கஉரை வெளிவருகிறது.

முதன்மைப் பதிப்பாசிரியர்

**பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தம்**

முதற்கட்டமாக 4 பகுதிகள் ஒரு செட்டாகவும், இரண்டாவது கட்டமாக 4 அல்லது 5 பகுதிகள் அடுத்த செட்டாகவும் வெளிவரும். முதல் பகுதி (பாலகாண்டம்) 1993 ஜூன் மாதம் வெளிவரவுள்ளது.

- ஒவ்வொரு பகுதியும் 1000 முதல் 1200 பக்கங்கள் - டெம்மி 1 க்கு 8
- ஒரு பகுதியின் விலை ரூ. 150/- மட்டுமே
- முதல் 4 தொகுதிகளுக்கு மொத்தமாக முன்பணம் செலுத்திப் பதிவு செய்து கொள்வோருக்கு 20% சிறப்புத் தள்ளுபடி. பதிவு செய்யக் கடைசி தேதி 30.6.93. இந்தச் சலுகை மேல்வரும் தொகுதிகளுக்கும் தொடரும்.

"கம்பராமாயணத்தை முழுவதும் உரையுடனாகத் தெளிவாக, அழகாக அ.ச. ஞானசம்பந்தம்... பதிப்பிக்கப் போகிற சுபகாரியம்... வரப்போகும் வளப்பான இந்த எடிஷனுக்கு அன்பர்கள் காப்பிக்கு முந்தவும்"

- கணையாழியில் எழுத்தாளர் சுஜாதா

**கோவை கம்பன் டிரஸ்ட்**

மணி மேனிலைப்பள்ளி வளாகம், பாப்பநாயக்கன்பாளையம், கோயமுத்தூர் - 37

# விதியை மாற்றும் விமோசனா



* செலின்

பசுமையான கபன் பார்க் நுழை வாசலில் கறுப்பு உடை அணிந்த இளம் பெண்கள் மௌனமாக நிற்பது நம்மைப் போன்றவர்களுக்கு ஆச்சரியமான விஷயம். ஆனால், பெங்களூர்வாசிகளுக்கு இது பழகிப் போன நிகழ்ச்சி.

ஒவ்வொரு வியாழக்கிழமை மாலையும் சுமார் ஒரு மணி நேரம் 'விமோசனா'வைச் சேர்ந்த பெண்கள் இப்படித்தான் நிற்கிறார்கள். எதற்கு? நாடு பூராவிலும் பெண்களுக்கு இழைக்கப்பட்டுக் கொண்டிருக்கும் அநீதிகளை எதிர்க்கும் ஒரு குறியீடாகத்தான் இப்படி நிற்கிறார்கள்.

இப்படி நிற்பதால் அநீதிகள் நடக்காமலிருந்து விடுமா?

''நாங்கள் இப்படி நிற்பதன் மூலம், எங்கோ நடக்கும் ஒரு கொடுமைக்குத் தீர்வு கிடைத்து விடாதுதான். ஆனாலும் எங்கோ நடக்கும் ஒரு கொடுமைதானே என்று இங்கிருக்கும் பெண்கள் அலட்சியமாக இருந்து விடவில்லை என்பதை மற்றவர்கள் உணர வாய்ப்பிருக்கிறதல்லவா! அதற்குத்தான்!'' என்கிறார் 'விமோசனா'வின் அமைப்பாளர்களில் ஒருவரான செலின்.

இந்த விமோசனாவின் பிள்னணி என்ன?

அது எமர்ஜென்ஸி காலம். இடது கம்யூனிஸ்ட் கட்சியின் ஓர் அங்கமான, Centre for information and development studies என்கிற குழு, சமூக விழிப்புணர்வு ஏற்படும் வகையிலான காரியங்கள் பல ஆங்காங்கே புரிந்து வந்தது. அக் குழுவில், சிலருக்குக் கட்சிக் கட்டுப்பாடு தங்கள் பணிக்கு இடையூறாக இருப்பதாகப்பட்டது. பிறந்தது, 'விமோசனா'! ஒரே கொள்கை - எதைச் செய்தாலும் சமூக அக்கறையோடு செய்வது.

இன்றைக்கு பெங்களூரில் பெண்களின் நலனுக்காகப் பாடுபடும் இயக்கமாகப் பெண்களாலேயே நடத்தப்படுகிறது விமோசனா.

''இன்றைக்குப் பெண்களுக்கு இருக்கும் எத்தனையோ பிரச்னைகளுள் தலையாயது வரதட்சணைக் கொடுமை. காவல் துறை இதனைப் பல சந்தர்ப்பங்களில் கண்டு கொள்ளாமல் இருப்பதையும், தமக்கு நடக்காதவரை எது பற்றியும் கலலை இல்லை என்று பொது மக்கள் நினைப்பதையும் கண்டறிந்தோம்.

''கொடுமைக்கு இலக்காகும் பெண்களின் வீட்டில் பேசித் தீர்வு காணும் முயற்சியை மேற்கொண்டோம். பெரும்பாலும் இது மிகவும் சிரமமான காரியம். கொடு



மைக்கு ஆளாகும் பெண்களே எங்களுக்கு ஆதரவு தர யோசிப்பார்கள். கைமீறிப் போன தருணங்களில் கோர்ட்டுக்குப் போய் விடுகிறோம்.

''எங்கள் முயற்சியையும் இதில் இதுநாள் வரை நாங்கள் பெற்றிருக்கிற வெற்றிகளையும் கண்டு இன்று பொழுது விடிந்தால் எங்கள் அலுவலகம் முன்பு ஒரு க்யூவே நிற்கிற அளவுக்கு நிலைமை மாறியிருக்கிறது...'' என்கிறார் செலின்.

**பெ**ண் விடுதலை பற்றித் தொடர்ந்து வீதி நாடகங்கள் நடத்துதல், 'சங்கர்ஷ்' என்றொரு ஆங்கில இதழ் பிரசுரித்தல், அவ்வப்போது கருத்தரங்குகள் நடத்துதல், பெண் கொடுமை பற்றிய போஸ்டர்கள் வெளியிடுதல் என்று வேறு பல பணிகளும் செய்கிறார்கள்.

''ஆண்டுதோறும் பெங்களூரில் பெண்களுக்கான திரைப்பட விழா நடத்துகிறோம். இதன் மூலமெல்லாம் பெண்கள் தங்களைத் தாங்களே உணர்ந்து கொள்ளுவதற்கு உதவுகிறோம்'' என்கிறார் செலின்.

**மு**ழுக்க முழுக்க பெண்களுக்கென்றே ஒரு நூலகமும் பெண்கள் சம்பந்தப்பட்ட புத்தகங்கள் மட்டுமே விற்கும் ஒரு புக் ஷாப்பையும் இவர்கள் நடத்தி வருகிறார்கள். இந்திய நூல்கள் மட்டுமல்லாது வெளிநாட்டு வல்லுநர்களின் அரிய நூல்களுமாகச் சுமார் ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட அரிய கலெக்ஷன். அத்தனையும் பெண் விடுதலை, பெண் முன்னேற்றம் பற்றியவை.

''எல்லாமே ஆங்கிலத்திலல்லவா இருக்கின்றன. தாய்மொழி மட்டுமே அறிந்த பெண்களுக்குப் பயன் கிடைக்காதே?'' என்று கேட்ட போது, ''தமிழிலும் கன்னடத்திலும் சில நூல்களை மொழிபெயர்த்து வெளியிடவும் ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கிறோம்!'' என்றார் செலின்.

– பா.ரா.

---

# 'கொலாஜ்' கலைஞர்

**வ**ண்ண வண்ணத் தாள்களுடைய வழு வழுப்பான பத்திரிகைகளை எடுத்துக் கொள்ளவும். அவற்றின் பக்கங்களைச் சின்னஞ்சிறு துண்டுகளாக வெவ்வேறு வடிவங்களில் கத்தரிக்கவும். கிடைக்கும் துண்டுகளை ஒன்று சேர்த்து அழகாக ஒட்டி அர்த்தமுள்ள படத்தை உருவாக்கவும்...

- இது பொழுது போகாதவர்களுக்கான வெட்டி வேலை இல்லை. ஓவியர் பாலுவால் கச்சிதப்படுத்தப் பட்டுள்ள 'கொலாஜ்' கலை.



● வி. பாலு

பாலுவின் 'கொலாஜ்' படைப்புகள் உலக நாடுகளின் கலைக் கூடங்களில் காட்சிக்கு வைக்கப்பட்டுப் பாராட்டுப் பெற்றவை. அவை பெரும்பாலும் 'உலக அமைதி'யை உணர்த்தும் வகையாகவே அமைந்துள்ளன. வண்ணம் வனப்புடன் உயிரோட்டம் அளிக்கும் ஒரு மூன்றாவது பரிமாணத்தையும் உள்ளடக்கியவை -

அரசுத் துறையில் பொறுப்பான பணியிலிருந்தபடியே கார்ட்டூன் சித்திரங்களும் ஓவியங்களும் ஆரம்பக் காலத்தில் வரைந்து வந்த பாலு, ஒரு கொலாஜ் கலைஞராகவே இன்று அறியப்படுகிறார். இக் கலை உதித்தது நம் நாட்டில்தான் என்பதும் அவர் கருத்து.

''இக் கலை ஐரோப்பிய நாடுகளில் தோன்றும் முன்னரே இங்கே நம் வீடுகளில் இருந்த சுவாமி படங்களுக்கு, இல்லத்தரசிகள் பட்டுத் துணியும் ஜிகினாத் துண்டங்களும் கத்தரித்து ஒட்டி அழகு சேர்த்தார்கள்...''

- இது 'கொலாஜ்' அல்லாது வேறென்ன?

பெங்களூரில் வசிக்கும் பாலுவின் படைப்புகளை ITC நிறுவனம் 'சிருஷ்டி' என்ற அழகிய புத்தகமாக வெளியிட்டுள்ளது. அதில் இடம்பெற்றுள்ள காந்திஜி ஓவியம் இது.



## பிலடெல்பியா சோதனை.

அக்டோபர் 1943 இல் நம் பூமியில் நிகழ்த்தப்பட்ட இச்சோதனை பொருட்களை கதிர்களாக மாற்ற முடியும் என்று நிருபித்தது. அமெரிக்க ராணுவக் கப்பல் மீது இச்சோதனை நடந்தது. ஐன்ஸ்டீனின் 'ஒரு முகப்படுத்தப்பட்ட கதிர்' மூலம் அதிசக்தி காந்த அலைகள் அனுப்பப்பட்டன. ரகசியமான இச்சோதனை பற்றி கப்பலில் இருந்தவர்களுக்குக் கூடத் தெரியாது. போருக்குக் காத்திருந்த அவர்கள், திடீரென கதிர்வீச்சாக மாறி, கப்பலோடு காணாமல் போய்விட்டார்கள். உலக யுத்தமெல்லாம் முடிந்து, 30 வருடங்கள் கழித்து, திடீரென்று தோன்றிய அவர்கள் பைத்தியமாகியிருந்தார்கள். சோதனை வெற்றி பெற்றாலும், சோதனைக்கானவர்கள் முழுத்தோல்வியடைந்தார்கள்.

— J. Manson Valentine

### எச்சரிக்கை!

இந்தத் தொடர் முடியும் தருணம் நீங்கள் இவ்வுலகில் இருப்பது துர்லபம். அதற்குள், மிஸ்டர் கணேசன்! ரஜினியின் தளபதி பத்தாம் முறை பார்த்து விடுங்கள்.

'மக்கள் தீர்ப்பை' விவரிக்கும்,

அத்யம் - 


"அனைவருக்கும் ஆத்மாவின் காலை வணக்கம்" ஸ்பீக்கர் கூவியது. ஏறத்தாழ விடியல். இன்னொரு நாளின் துவக்கம். அனைத்துக் குடியிருப்புகளின் மெகா ஸ்க்ரீன்களும் உயிர் பெற்றன. ப்ரோகிராம் செய்யப்பட்ட டெலி திரைகள். 35 எம்.எம். திரைகள். திரையில் பறவைகள் பாடின. கோழிகள் கூவின. பசுக்கள் மேய்ந்தன. முப்பரிமாணத் திரை உருவம் காட்டி ஏமாற்றியது.

"அனைவருக்கும் ஆத்மாவின் காலை வணக்கம். இன்றைய தினம் சுவாரஸ்யமாக அமைய வாழ்த்துக்கள்."

எல்லார் வீட்டிலும் ஆத்மாவின் மெஷின் குரல் ஸ்பீக்கரில் அதிர்ந்தது. ஆத்மா மத்திய மாஸ்டர் கம்ப்யூட்டர். 'எல்லாம்' கண்காணிக்கும் எஜமான்.

இன்றைய தேதியில், இயற்கைச் சமன் தவறிய உலகில், மிருகங்களும் பறவைகளும் மியூஸியத்தில் மட்டுமே காண முடிந்த அரிய பொருளாகியிருந்தன. திரையில் மட்டுமே உயிருடன் இயக்கம் பார்க்கலாம். திரையில் மட்டுமே உலவும் மிருகங்கள். எல்லாம் அந்தக் கால மிருகங்கள். காலத்தின் சின்னங்கள்.

ப்ரொஃபஸர் ஆர்யா, வீடியோவிஷன் பட்டனில் பத்திரிகைச் சேனலைத் தட்ட, திரையில் தலைப்புச் செய்திகள் மாறின. எந்த செய்தி வேண்டுமோ, அதன் விவரம் மட்டும் அறிய வேறு பட்டன் தொட்டால் போதும். தேவையான செய்தி மட்டும் விலாவாரியாகத் திரையில் ஒளிரும்.

அந்தச் செய்தித் தலைப்பு ஆர்யாவை அதிர வைத்தது.

- உணவுத் திருட்டு.
திருடன் அகப்பட்டான்.
ZEL -

இந்த இருபத்தைந்தாம் நூற்றாண்டில் திருட்டா? ஏறத்தாழ 'திருட்டு' காணாமல் போன காலம். ஆர்யாவின் அற்புதக் கண்டு பிடிப்பான 'டெலினி' அதில் முக்கிய பங்கு வகித்தது. அதற்காக 'திருட்டை ஒழித்த திலகம்' பட்டம் பெற்றவர் ஆர்யா.

'டெலினி' என்பது நினைவைப் படிக்கும் கருவி. தலையில் பொருத்திக் கொண்டால் எதிரில் இருப்பவர் எண்ணம் அறியலாம். அதி சக்தி டெலினி விலை அதிகம். தொலைத் தொடர்பு கொள்ளலாம்.

# ஆத்மாவுக்கு ஆபத்து

கல்கி
பொன்விழா
பரிசு நாவல்

டெலிபதி + டெலிபோனி - டெலினி.

டெலினி வந்த பத்து வருடத்தில் திருட்டு எண்ணம் யாருக்கும் கிடையாது. எனில் எப்படி உணவுத் திருட்டு?

ஆர்யா அந்த தலைப்புச் செய்தியின் விவரம் அறிய பட்டன் தொட்டார். உடனே திரையில் செய்தி விவரமாக நகர்ந்தது.

'உணவுத் திருடன்
பிடிபட்டான்.

ZEL ஜூன் 16. ZEL நகரில் எண் 1342 உணவு வழங்கி கம்ப்யூட்டர் சில தினங்களாக அதிகப்படியான உணவு விநியோகிக்க ஆரம்பித்தது. இதனால் ஆத்மாவுக்கு சந்தேகம் வர, தொடர்ந்த விசாரணையில் ஜலன் பிடிபட்டான். உணவுக் கம்ப்யூட்டரின் 'டேடா பேஸி'ல் விளையாடிய 'தேச துரோகி' ஜலனுக்கு ஆத்மாவின் 'பொது மக்கள் தண்டனை' தீர்ப்பாகி உள்ளது. ஜூன் 18, மாலை ZEL சதுக்கத்தில் தண்டனை அளிக்க மக்கள் வரவேற்கப்படுகிறார்கள். இது போன்ற செயல்களில் ஈடுபட வேண்டாமென்று மக்கள் எச்சரிக்கப்படுகிறார்கள். ஆத்மாவின் செயல்பாடுகளில் குறுக்கிடுவது தேசத்துரோகம் என்பது மீண்டும் நினைவுறுத்தப்படுகிறது.'

செய்தி அத்துடன் முடிய, ஆர்யா சற்றுக் கண் மூடி நினைவிலாழ்ந்தார். டெலினி படைத்தது தவறோ என்று ஓர் எண்ணம் ஓடி மறைந்தது.

மனிதனின் ஆகார குணங்களை அழுத்தும் முயற்சி டெலினி. அதன் மூலம் மனிதனை உன்னதமாக்கலாம் என்ற தனது கோட்பாடு அவசர முடிவோ என்று ஆர்யாவுக்கு சந்தேகம் வந்தது. எவ்வளவுதான் சௌகரியங்கள் தரப்பட்டாலும் குற்ற உணர்வுகள் அவ்வப்போது தலை காட்டத்தான் செய்கின்றன. ஒரே வித்தியாசம் என்னவென்றால், குற்றவாளி உடனே பிடிபட்டு விடுகிறான்.

மக்களில் பாதிக்கு மேல் ஓய்வு விடுதிகளில் போஷிக்கப்படுகிறார்கள். 50 வயது ஆனவர்கள் இறுதி இல்லத்திற்கு அனுப்பப்படுகிறார்கள். கொஞ்சம் பேருக்கே உழைக்க அனுமதி. அவர்கள் முதன்மைப் பிரஜைகள். ப்ரொபஸர் ஆர்யா ஒரு முதன்மைப் பிரஜை. ஆத்மாவுக்காக பல நூதன உதவும் கருவிகளை ஆராய்ச்சி மூலம் கண்டு பிடித்துள்ளார். தற்போதைய ஆராய்ச்சி மனித மூளை பற்றியது.

'ப்ராஜக்ட் பிரெய்ன்' வெற்றி பெற்று விட்டால் பல நன்மைகள். ஒருவனை டாக்டராக்க வேண்டுமெனில் அவன் மூளையின் ஒரு பகுதியை 'டியூன்' செய்து விட்டால் போதும். அந்தத் துறையில் விரைவில் முன்னேறிவிடுவான். என்ஜினியர், விண்வெளி பைலட் என்று அந்தந்தத் துறைக்கு வேண்டியவர்களை சின்ன வயதிலேயே உருவாக்கி விடலாம். கல்விக்காக வருடங்களை வீணாக்க வேண்டாம்.



'மூளையின் பரிணாமம்' என்ற புத்தகத்தில் குறிப்பெடுத்து வைத்த அந்தப் பகுதி எங்கே என்று அரைமணி தேடியும் பயனில்லை. 40 வயதில் 50 வயதுத் தோற்றம் கொண்ட ஆர்யா தன் ஞாபக மறதியை நொந்து கொண்டார்.

மீண்டும் புத்தகம் படித்து விடலாம் என்று வீடியோ விஷனில் லைப்ரரி அழைத்தார். திரையில் வந்த லைப்ரரி 'உங்கள் உதவிக்கு மத்திய லைப்ரரி காத்திருக்கிறது' என்றது.

'எந்த சப்ஜெக்ட்?' என்ற எழுத்துக்கள் மின்னின.

ஆர்யா 'ப்ரெய்ன்' என்று பட்டன் தட்ட வி.வி திரையில் புத்தக கேட்லாக் வரிசையாக நகர ஆரம்பித்து. 'மூளையின் பரிணாமம்' பெயர் வந்ததும் விவரம் கேட்டார் ஆர்யா.

இப்போது அப்புத்தகத்தின் பக்கங்கள் திரையில் மெதுவாக ஓட ஆரம்பித்தன. பட்டன் தட்டலில் வேகமாகப் பக்கங்களைப் புரட்டித் தேவையான பக்கங்களைப் பிரிண்டரில் பிரதியெடுத்தார்.

மீண்டும் மறக்காதிருக்கும் பொருட்டு வி.வியில் சோட்டியை அழைத்தார். சோட்டி உதவி ஆராய்ச்சியாளர். கட்டியான பெண். அவளிடம் கூறி வைப்பது நல்லது.

''ஹலோ சோட்டி இல்லையா?''

''ஸாரி! இது ஜரினா. உங்களுக்கு எந்த நம்பர் வேண்டும்?''

திரையில் தோன்றிய ஜரினா கேள்வி கேட்டாள்.

"22152A352."

ஜரினாவின் வி.வி திரையில் தாடி சொரிந்தார் ஆர்யா.

''இது 22153A352.''

ஆர்யாவின் வி.வி திரையில் எரிச்சல் காட்டினாள் ஜரினா.

''சாரி மறந்து விட்டேன்.''

வழிந்தார் ஆர்யா.

''ராங் நம்பர்.''

போனை வைத்தார்.

அன்று தேதி 18. மக்கள் அவசர அவசர மாக வேலை முடித்தார்கள். வேலை என்பது குளித்துச் சாப்பிட்டு, படித்து, பின் தூங்குவது. அறிவை வளர்ப்பதே பிரதான நோக்கம். எல்லாருக்கும்தினம் இரண்டு மணி கல்வி உண்டு. வயதுக்குத் தக்கபடி நேரம் மாறும்.

கல்வி நேரத்தில் வி.வி முன் சென்று அமர்ந்தால் கம்ப்யூட்டர் பாடம் நடத்தும். இடையே ஆத்மாவின் குறுக்குக் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டும். ஆத்மாவால் எப்படி ஒரே சமயத்தில் அத்தனை பேரையும் கண்காணிக்க முடிகிறது? என்பது

# பதிலெழுதாத முதல்வர்!



அண்டை மாநிலங்களுடனான உறவுகளுக்கு நமது முதல்வர் ஜெயலலிதா எந்த அளவுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறார் தெரியுமா? சொன்னால் அசந்து போவீர்கள்!

"கர்நாடகத்துக்கும் தமிழகத்துக்கும் இடையிலான கலாசார உறவுகள் பலப்பட வேண்டும்; அதற்கு முதலில் தமிழ் இலக்கியங்களைக் கன்னடத்திலும் கன்னட இலக்கியங்களைத் தமிழிலும் மொழி பெயர்த்து, இலக்கியப் பரிவர்த்தனை செய்ய வேண்டும்!" என்று ஓர் இலக்கிய விழாவில் கர்நாடக முதல்வர் மொய்லியிடம் சொன்னோம். அவரும் அந்த இடத்திலேயே, 'தமிழ் இலக்கியங்களைக் கன்னடத்தில்மொழி பெயர்ப்பதற்கு அரசின் நிதி உதவிக்கு உத்தரவிடுகிறேன். இதேபோல் தமிழகத்திலும் ஏற்பாடு செய்யத் தமிழக முதல்வருக்கு எழுதுகிறேன்!' என்று சொன்னதோடு உடனே கடிதமும் எழுதினார். ஆனால் இன்றுவரை ஜெயலலிதாவிடமிருந்து பதிலே இல்லை! இப்படியிருந்தால் மாநில நல்லிணக்கம் எப்படி வரும்?" என்று கூறி வருத்தப்பட்டார் தமிழிலும் கன்னடத்திலும் பத்திரிகைகள் நடத்தி வரும் தினச்சுடர் மணி.

* 'தினச்சுடர்' மணி



---

பலரின் கேள்விக் குறி.

ஆத்மா தூணிலும் இருக்கும், துரும்பிலும் இருக்கும். யாரும் தப்புச் செய்து தப்ப முடியாது. பிறகு ஜலனைப் போல மாட்டியாக வேண்டியதுதான்.

ZEL சதுக்கம் நிரம்ப ஆரம்பித்தது. 'தண்டனை தர' ஆர்வம் கொண்டோர் வான டேக்ஸி, ராக்கெட் கார் என்று பல வழிகளில் வந்து குவியத் தொடங்கினார்கள்.

மக்கள் தீர்ப்பு ஏறத்தாழ ஒரு விழா மாதிரி நடக்கும். அன்று எல்லாம் இலவசம். தீர்ப்பு சதுக்கம் செல்ல எனில் வாகனங்களில் கட்டணம் வாங்க மாட்டார்கள். தவிர, உற்சாக பானம் அன்று மட்டும் கட்டுப்பாடின்றி வழங்கப்படும்.

சதுக்கத்தின் மையப் பகுதியில், திறந்த மேடையில் குற்றவாளியும், தேசத் துரோகியுமான ஜலன் கைகள் பின்புறம் விலங்கிடப்பட்ட நிலையில் கண்களில் பயம் வழிய நிறுத்தப்பட்டிருந்தான்.

'உற்சாக' மக்கள் மேடையில் இருந்த ஃபைபர் குச்சிகளைத் தூக்கிக் கொண்டு ஆனந்தக் கூத்தாடினர். பின் அதன் நுனியை ஜலன் மேல் தொட்டார்கள். தர்ம அடி தண்டனை ஆரம்பமானது.

ஃபைபர் குச்சியின் பின் நுனி வலியைப் பிரசவிக்க, ஜலன் துடித்தான். ஓடி, மேடையின் மறுபுறம் நகர அங்கிருந்தவர்கள் தடி நுனி முத்தம் தர, நெளிந்த ஜலன் இங்கும் அங்கும் ஓட, கூட்டம் ஆர்ப்பரித்தது. அவர்களுக்குள் இருந்த பார்பேரியத் தனம் விழித்துக் கொண்டது.

மாறி, மாறி வலி அதிர்ச்சி பெற்ற ஜலன் தாங்காமல், தவித்து, மடங்கி, குனிந்து, குதித்து, கூட்டத்தில் அங்கும் இங்கும் ஓடி, தொடர்ந்து துரத்தப்பட்டு, ஃபைபர் முத்தம் பெற்று, துடித்து, வெறி கொண்டு கத்தி, ஓடி, ஆடி அடங்கி, விழுந்து இறந்தான்.

கூட்டம் இப்போது ஆர்ப்பரித்தது.

"ஆத்மா வாழ்க!"

"தேச துரோகி ஜலன்கள் ஒழிக!"

என்று கோஷத்துடன் வெளியேறின. அந்தத் தருணத்தில் அவர்கள் மனத்தில் பயம் படிந்தது. ஆத்மாவுக்கெதிராகத் தப்புச் செய்யும் எண்ணம் அறவே மறைந்தது.

அதே சமயம் நகரின் ஓர் ஒதுக்குப் புற மூலையில் ஆத்மா அறியாத அவன் ப்ரசன்னமானான்!

(தொடரும்)

கர்நாடகாவில் எத்தனை முறை அரசு மாறினாலும் சரி, எந்தக் கட்சி ஸீட் பிடித்தாலும் சரி, விளையாட்டுத் துறையில் இருக்கிறவர்களுக்கு எப்போதும் வசந்த காலம்தான். இன்றைக்கு இந்தியா சார்பில் சர்வதேச அளவில் தடகளப் (அத்லெடிக்) போட்டிகளில் கலந்து கொள்ளும் வீரர்களில் சுமார் இருபது பேரைத் தயாரித்து அளித்திருப்பது கர்நாடகா. விளையாட்டுத் துறையினருக்கு இங்கே அரசு வழங்கும் சலுகைகளும் வாய்ப்புகளும் மூக்கின்மேல் விரல் வைக்கச் செய்யும். சாம்பிளுக்கு ஒன்று.

கண்(ட்)டீரவா ஸ்டேடியம். பெங்களூரில் உள்ள 'கர்நாடக மாநில தடகள விளையாட்டுப் பயிற்சிக் கழகம்.'

அரசுத் துறை நிறுவனமான இதில், தடகள விளையாட்டுக்களில் ஆர்வமுள்ள சிறுவர் சிறுமியருக்கு வெகு மும்முரமாகப் பயிற்சி அளிக்கிறார்கள். அதிகாலை நேரத்தில் ட்ராக் ஸூட்டும், ஷூவுமாக நூற்றுக் கணக்கானோர் பயிற்சி செய்வது கண்கொள்ளாக் காட்சி.

இவ்வமைப்பின் செயல்பாடுகளை விளக்கினார் இதன் இயக்குனர் பெல்லியப்பா.

''கடந்த 77 இல் ஆரம்பிக்கப்பட்ட இந்த மாநிலப் பயிற்சி மையத்தின் (State Coaching Centre) ஒரே நோக்கம் - விளையாட்டுத் துறையில் ஆர்வமுள்ளவர்களுக்குப் பயிற்சி அளித்து, வாய்ப்புக்கள் ஏற்படுத்தித் தருவது. மூன்று மாதங்களுக்கு ஒருமுறை 'கோச்சிங் காம்ப்' ஆரம்பிக்கிறோம். அச்சமயம் நாளிதழ்களில் விளம்பரம் செய்து, (சிறுவர்களை) அழைக்கிறோம். அடிப்படைத் தகுதி ஒன்றும் தேவையில்லை. ஆர்வம் போதும். நாங்கள் வைக்கிற சிறுசிறு பரீட்சைகளில் தேறினால் போதும். ஒவ்வொரு துறைக்கும் ஒவ்வொரு முறையும் 25 பேரைத் தேர்ந்தெடுத்துப் பயிற்சி ஆரம்பிக்கிறோம்!''

# விளையாட்டாக ஒரு விஷயம்!

* ஓட்டப் பயிற்சி



* பெல்லியப்பா



* லிங்கப்பா



* ஸ்வேதா

இந்தப் பயிற்சி முகாம் ஆறு வாரங்களுக்கு. தினமும் காலை 6.30 மணியிலிருந்து 9 வரையிலும், பின் மாலை 4 மணியிலிருந்து 6.30 வரையிலும். உணவு, உடை, உறைவிடம், விளையாட்டுச் சாதனங்கள், மருந்துவம், இன்ன பிறயாவும் இலவசம்! பயிற்சிக் கட்டணம் கூட கிடையாது.

பயிற்சிக் காலத்தில், சிறப்பாகப் பரிணமிக்கும் வீரர்களைத் தேர்ந்தெடுத்து தீவிர 'கோச்சிங்' ஆரம்பிக்கிறார்கள். இதற்கும் கட்டணம் ஏதும் இல்லை. சகலமும் இலவசம்.

இந்தச் சிறப்புப் பயிற்சிக்காக ஆங்காங்கே விளையாட்டுப் பள்ளிகளும், விளையாட்டு வீரர்களுக்கான பிரத்தியேக அரசு ஹாஸ்டல்களும் இயங்குகின்றன.

பதினான்கு வயதுக்குட்பட்ட சிறுவர்களுக்கான இந்த மாதிரி விளையாட்டுப் பள்ளி குடகு மாவட்டத்தில் இயங்குகிறது. இதில் சேர அடிப்படைத் தகுதி எட்டாங் கிளாஸ்.

வெறும் ஓட்டப் பயிற்சி மட்டுமல்லாது ஹாக்கி, ஸ்கேட்டிங், நீச்சல், மல்யுத்தம் இப்படியானவைகளும் உண்டு. (ஒவ்வொரு துறைக்கும் 25 பயிற்சியாளர்கள்!)

பயிற்சி பெறும் விளையாட்டு வீரர்களின் சகல தேவைகளையும் இவர்களே ஏற்றுக் கொள்கிறார்கள். ''ஒரு வீரருக்கு ஒரு நாளைய உணவுக்கான செலவு மட்டும் ரூ. 35 ஆகிறது!'' என்கிறார் பெல்லியப்பா.

'கண்டீரவா'வில் காலை நேர ஸ்கேட்டிங் வகுப்பை முடித்துவிட்டு வெளியே வந்த சிறுமி ஸ்வேதாவை அணுகி விசாரித்தோம். ஸ்வேதா - பெங்களூர் பிஷப் காட்டன் உயர்நிலைப் பள்ளியில் எட்டாம் வகுப்பு - போகப் போகிற



* பயிற்சிக்களங்கள்

மாணவி . (பிஷப் காட்டன் பள்ளி பிரபு, கௌதமி உள்ளிட்ட பல சினிமாப் பட்டாளத்தை உருவாக்கிய சிறப்பு வாய்ந்தது.)

''மற்ற விளையாட்டுக்களில் கோச்சர்கள் காட்டுகிற கவனம் ஸ்கேட்டிங்கில் காட்டப்படுவதில்லை. 'சும்மா சறுக்க'ச் சொல்லித் தருகிறார்களே தவிர 'டெக்னிக்ஸ்' எதுவும் அறிமுகப்படுத்தப் படுவதில்லை. தவிர, இங்கு ஸ்கேட்டிங் சொல்லித் தருபவர் ஒரு மாஜி குத்துச்சண்டை வீரர். அவருக்கும் ஸ்கேட்டிங்குக்கும் என்ன சம்பந்தம் என்பது புரியவில்லை!'' என்றாள் சிறுமி ஸ்வேதா. அந்தத் துணிச்சலான பேச்சே நமக்கு பிரமிப்பையும் மதிப்பையும் ஏற்படுத்துகிறது.

இதற்கு பெல்லியப்பா என்ன சொல்கிறார்?

''வாஸ்தவம். ஒலிம்பிக்கில் ஏற்கப்படுகிற விளையாட்டுக்களுக்கு மட்டுமே நாங்கள் சிறப்புக் கவனம் அளிக்கிறோம். ஸ்கேட்டிங், ஒலிம்பிக் விளையாட்டு அல்ல! இருப்பினும் சகல துறைகளிலும் பயிற்சி உண்டு. ஒலிம்பிக் ஆட்டங்களுக்குச் சிறப்புப் பயிற்சி!''

நாம் ரிடையரான பிறகும் அங்கு வந்து சிறுவர், சிறுமியருக்குத் தடகளப் பயிற்சியளித்துக் கொண்டிருக்கும் லிங்கப்பா சொன்னார் : ''ரிடையர்மெண்டா? அப்படியொருவன் நினைத்தால் அவன் அந்தக் கணமே இறந்து போய்விட்டான் என்றுதான் அர்த்தம். எனக்குத் தெரிந்த வித்தைகளை நான் சாகும்வரை மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுத்துக் கொண்டுதான் இருப்பேன். என்னைப் பொறுத்தவரை அப்படியிருப்பதுதான் வாழ்க்கை!''

கர்நாடக அரசு விளையாட்டுத் துறைக்குச் செய்கிற உபகாரம் மாநிலத்துக்கு மட்டுமல்ல; தேசிய அளவிலேயே நம் கௌரவத்தைக் காக்கிறது. வருஷாந்திர பட்ஜெட்டில் இதற்காகக் கணிசமான ஒரு தொகையை ஒதுக்கி விடுகிறார்கள் - எல்லோரும்தான் செய்கிறார்கள் - அது பெரிசில்லை.

சரியான முறையில் அது பயன்படுத்தப்படுகிறது.

**- கிருஷ்ணன்**



## இதுவரை...

'போலார் கன்ஸ்ட்ரக்ஷன்ஸ்' என்கிற பெயரில் கட்டட வேலைகளைக் காண்ட்ராக்ட் எடுத்து நடத்தி வருகிறாள் நித்யா. படிக்கிற காலத்தில் சக மாணவனான விசுவத்தை அவள் காதலித்தாள். அவனது தாய் கேட்ட வரதட்சணை காரணமாகத் திருமணம் முறிந்து போக, அவனை வெறுக்கிறாள் நித்யா. தன் தாயின் மறைவுக்குப் பிறகு, அவன் மீண்டும் திருமணம் பேச வர, நித்யா மறுக்கிறாள். ஆனால், அவனது வசதியிலும் பேச்சிலும் மயங்கும் தங்கை துர்க்காவை அவனுக்கே மணம் முடித்து வைக்கிறாள்.

விசுவத்தின் 'ஈகோ' நித்யாவைப் பழிவாங்க நினைக்கிறது. பணபலத்தின் மூலம் நித்யாவுக்கு வர வேண்டிய காண்ட்ராக்டுகளையெல்லாம் தனது 'விசுவம் இன்டர்நேஷனல்' நிறுவனத்துக்குக் கிடைக்கும்படி செய்கிறான். நித்யாவின் தம்பி ராமனையும் பணத்தாசை காட்டி நித்யாவிடமிருந்து பிரித்துத் தன்னிடம் வேலைக்கு வைத்துக் கொள்கிறான் விசுவம். நித்யா குடும்பத்தை விட்டுப் பிரிந்து வந்து, விசுவத்தின் சூழ்ச்சிகளுக்கு எதிராகப் போராடுகிறாள். இலக்கியவாதி நண்பன் பிரசன்னா அவளுக்கு உதவுகிறான்...

## 11

"உன்கிட்டக் கொஞ்சம் பேசணும் பிரசன்னா."

மன்னியின் குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினான் பிரசன்னா.

புடைவைத் தலைப்பில் கைகளைத் துடைத்தவாறு, எப்போதும் மிளிரும் புன்னகை முகத்தில் தவழ, ராஜி உள்ளே நுழைந்து, சுவாதீனமாக ஜன்னல் விளிம்பில் உட்கார்ந்து கொண்டாள்.

எழுதிக் கொண்டிருந்த பிரசன்னா பேனாவை மூடி வைத்து விட்டு, மன்னியை அதிசயமாகப் பார்த்தான். இரவு பத்து

மணிக்கு மேல் இவள் என்ன பேசப் போகி றாள்? சிரித்துக் கொண்டே கிண்டலாக அவளைப் பார்த்துக் கேட்டான்.

''என்ன மன்னி? அண்ணா இல்லாம போர் அடிக்கிறதா?''

கிருஷ்ணமூர்த்தி கேஸ் விஷயமாக சேலம் போயிருந்தார்.

கலகலவென்று சிரித்தாள் ராஜி.

''என்ன பிரசன்னா? கேலியா பண்றே? நான் எப்போ வரும்னு கேக்கத்தான் வந் தேன்.''

அவன் தலையைக் குனிந்து கொண் டான்.

''என்ன மன்னி? என் கல்யாணத்துக்கு இப்பொ என்ன அவசரம்?''

ராஜி மென்மையாகச் சிரித்தாள்.

''அவசரம்தான் பிரசன்னா. என் கல்யா ணத்தப்போ எனக்குப் பதினெட்டு வயசு. உங்க அண்ணாவுக்கு இருபத்தி அஞ்சு வயசு. இப்பொ உனக்கு முப்பத்திரெண்டு நடக்கி றது. கிழவனானப்புறமா கல்யாணம் பண் ணிக்கப் போறே?''

பிரசன்னா பெரிதாகச் சிரித்தான். பிறகு, ''அப்புறம்?'' என்றான்.

''என்ன பிரசன்னா? விளையாடறியா? வயசு ஏறிண்டு போற ஒவ்வொரு வருஷமும் நீ எதையோ இழக்கிற விஷயம் உனக்குப் புரியலை? இளமையாக இருக்கிறப்பவே கல்யாணம் பண்ணிக்கணும் பிரசன்னா.''

பிரசன்னா பேசாமலிருந்தான். மன் னியா இப்படியெல்லாம் பேசுகிறாள்?

''இந்த மன்னி இப்படியெல்லாம் பேச றாளேன்னு நினைக்கிறே... புரியறது. இள மைன்னு நான் சொல்றப்போ - நான் கேவ லம் உடம்பைப் பற்றித்தான் பேசறேன்னு தப்பர்த்தம் பண்ணிக்காதே பிரசன்னா. வயசு ஏற ஏற மனசுல விட்டுக் கொடுக்கற சுபாவம் கம்மியாயிண்டு வரும். 'ஈகோ' ஜாஸ்தியாயி டும். மனசுல ஒரு பிடிவாதம் கலந்த மூப்பு வந்துடும். சின்னச் சின்ன மவுஸ்தாபங்க ளெல்லாம் கூட பிரம்மாண்டமாத் தெரியும். கொஞ்சம் சீரியஸான விஷயங்களெல்லாம் விகவரூபமெடுக்கும். நீ தனி, நான் தனிங் கற அபிப்பிராயத்தோட ரெண்டு பேர் கல்யா ணம் பண்ணிண்டா அவாளோட வாழ்க்கை யில ஒரு 'த்ரில்', ஒரு 'சுவாரஸ்யம்' - இருக் கும்னு நீ நம்பறியா பிரசன்னா?''

அவன் பிரமித்துப் போய் உட்கார்ந் திருந்தான்.

''தனிப்பட்ட, சுதந்திரமான கொள்கை கள் தேவைதான். இல்லைங்கல்லை. ஆனா - இதோட மனசுல கொஞ்சம் ஆணவமும் சேர்ந்துட்டா, எந்த விஷயத்துக்கும் தீர்ப்புக் காண்றது கஷ்டமாப் போயிடும். மனசு ரெண்டும் பரிபூர்ணமா இணைஞ்சு போகக் கன்னா அங்கே வாழ்க் கை அமர்க்களமா இருக் கும் பிரசன்னா. பொம் மனாட்டி கொஞ்சம் விட்டுக் குடுக்கத்தான் வேணும். இது அடி மைத்தனம் இல்லை - அன்புப் பிணைப்பு.''

இந்த மன்னியின் மனதில் இத்தனை கருத்துக்களா? இவ ளுக்கு அக்கம் பக்கம் சென்று வம்பு பேசும் பழக்கம் கிடையாது. பாடுவாள். நிறைய புத் தகங்கள் படிப்பாள். சினிமா? அதிலும் ஒரு வித டேஸ்ட். மசாலாப் படங்கள் அறவே பிடிக் காது. அந்தக் காலத்தில் பீடோவன், மொட் ஸார்ட் எல்லாம் கூட ரசித்ததாகச் சொல்லு வாள். கிளார்க் கேபிள் மிகவும் பிடித்த நடிகன்.

அண்ணா?

நேர் விரோதம். கர் நாடக சங்கீதம் பிடிக் காது. வெஸ்டர்ன் கிளா ஸிகலும் பிடிக்காது. சுத்தமான இசையில் விருப்பம். கதைப் புத்த கங்களில் நாட்டம் கிடையாது. மார்க் ஸ்"ம் ஏங்கல்சும் கட வுள்கள். ஒவ்வொரு சனிக்கிழமையும் சினிமா பார்க்க வேண் டும்.

ஆனாலும் இத்தனை முரண்பாடுகளுட னும் இவர்களுடைய வாழ்க்கை சற்றும் காதல் குறையாமல் அமர்க்களமாக ஓடிக் கொண்டிருக்கு - சிரிப்பும், உல்லாசமும், சிணுங்கலும், சீண்டலுமாக.

''என்ன பிரசன்னா? பேச்சையே காணோம்?''

''இல்லை மன்னி! நீங்க இப்படியெல் லாம் கூடப் பேசுவேள்னு நான் எதிர்பார்க் கலை.''

''ஏம்பா? நீ இதுக்கு மேலே என்ன வெல்லாமோ எழுதறப்போ, நான் இது கூடப் பேச முடியாதா என்ன? சரி - அதெல் லாம் கெடக்கட்டும். நீ இப்போ கல்யாணம் பண்ணிக்கப் போறாயா, இல்லையா?''

அவன் பெரிதாகச் சிரித்தான்.

''என்ன மன்னி, மிரட்டறேளா?''

ஆபஸ்தம்பன்



"எப்போ தலைவர் சமாதிக்குப் போனாலும் இரண்டு மலர் வளையம் வைக்கறீங்களே! என்னத்துக்கு?"

"ஒரி... ஒரி... இரண்டாவது வளையம் அவரோட கொள்கைகளுக்கு!"

- வேதா ரீ எஸ். ரமேஷ்

''இதோ பாரு - இப்படிச் சிரிக்கச் சிரிக்க மழுப்பாதே. உன் அண்ணா என்னடான்னா - 'ராஜி இவன் என்னைப் போல சாது இல்லை. மனசுக்குள்ள யாரையாவது நெனைச்சு வெச்சிண்டிருக்கானோ என்னவோ. நீயே கேட்டு வை'ன்னு என்னை மாட்டி விட்டுப் போயிருக்கார். நீ இப்போ என்கிட்டே ரெண்டுல ஒண்ணு சொல்லியாகணும் பிரசன்னா. கல்யாணம் பண்ணிக்கப் போற உத்தேசம் இருக்கா, இல்லையா?''

பிரசன்னா நீண்ட பெருமூச்சு விட்டான்.

''அதுல ஒரு பெரிய பிரச்னை இருக்கு மன்னி.''

''என்ன பிரச்னை பிரசன்னா?''

''நான் சொன்னா, நீங்க தப்பா எடுத்துக்க மாட்டேளே?''

''இது என்ன கேள்வி பிரசன்னா? உனக்குத் தெரியாது - நான் உன் மேல எவ்வளவு பிரியம் வெச்சிருக்கேன்னு. ஹரிணியை விட உன்கிட்ட எனக்குப் பிரியம்தான் - கொழந்தே என்னை நம்பினா நம்பு.''

அவள் கைநீட்டி அவனுடைய வலது கையைப் பற்றி இழுத்துப் புறங்கையில் முத்தமிட்டாள். அவள் கண்கள் லேசாகக் கலங்கியிருந்தன.

''சொல்லு ராஜா - நீ என்ன சொன்னாலும் உன் மனசை என்னால புரிஞ்சுக்க முடியும்.''

''எனக்கு அது தெரியும் மன்னி. அதனாலதான் இந்தத் தயக்கமே.''

கலகலவென்று சிரித்தாள் ராஜி.

''நீ யாரையாவது மனசுல நெனைச்சிண்டிருக்கியா? இல்லை - கல்யாணத்துக்கப்புறம் அவளோட தனி வீட்டுல இருக்க ஆசைப்படறயா? சொல்லு பிரசன்னா. உன்னோட சந்தோஷம்தான் எனக்கு முக்கியம்.''

''மன்னி - உங்களோட இந்த அன்புக்கு நான் ரொம்பவும் கடமைப்பட்டிருக்கேன். அதனாலதான் நான் கல்யாணம் செஞ்சுண்டப்புறம் அம்மாவை என் கூடக் கூட்டிண்டு போய் வெச்சுக்க விரும்பறேன்.''

அவன் தழுதழுத்த குரலில் கூறினான்.

''மன்னி... உங்களுக்கும் ஒரு 'சேஞ்ச' வேணும். நீங்க இந்தாத்துக்கு வந்தப்போ எனக்கு வயசு ஏழு. என்னையும் குழந்தையாய் பார்த்துண்டு, அம்மாவையும் பார்த்துண்டு... ஓ!! இருபத்தி அஞ்சு வருஷமாகலை? நீங்க என்னைக்குத்தான் உங்களுக்காக வாழப் போறேள்?''

''என்ன பிரசன்னா இது? பெரிய பெரிய வார்த்தையெல்லாம் பேசிண்டு? ஒரு பொம்மனாட்டிக்கு உடம்புக்கு வந்தா, வீட்டுல இருக்கற இன்னொரு பொம்மனாட்டி பார்த்துக்க மாட்டா? நான் உன்னோட அம்மாக்குன்னு அப்படி என்ன ஸ்பெஷலாப் பண்ணிட்டேன்? எல்லோரும் பண்றதில்லையா?''

''எல்லாருமே பண்ண மாட்டா மன்னி. உங்களைப் போல பொறுமையா யாரும் பண்ண மாட்டா.'' அவன் அழுத்தமாகக் கூறினான்.

''சரி - அப்படியே வெச்சுக்கோ. அதுக்கு அம்மாவையும் கூட்டிண்டு தனியாப் போவானேன்? நீ குடித்தனம் பண்ணு. அம்மா என்னத்துக்கு ஒருத்தி நடுவில?''

''மன்னி - நான் தனிக்குடித்தனம் பண்ணணும்கிற ஆசையில பேசலை.''

''அப்போ? அம்மா இங்கேயே இருக்கட்டும். நீயும் அவளும் கூட இங்கேயே இருங்கோ. நாங்க ரெண்டு பேருமா அம்மாவைப் பார்த்துக்கறோம்.''

அவன் பேசவில்லை. அவளே தொடர்ந்தாள்.

''இது பழைய காலத்து வீடு. புதுசா பெயிண்டு அடிக்க, மாடியில ரெண்டு ரூம் கட்டினாச் சரியாப் போயிடும். மாடியில ஃபேஷனாக் கட்டலாம் பிரசன்னா. மொஸைக் தரை போட்டு ரெண்டு ரூம் - ஒரு அட்டாச்டு பாத்ரூம். என்ன பிரசன்னா, பேசவே மாட்டேங்கறே? வரப் போறவ என் கூட ஒத்துப் போக மாட்டாளோன்னு பயப்படறியா?''

அவன் திடுக்கிட்டான்.

''பயப்படாதே பிரசன்னா. நித்யா கூட ஒரு மணி நேரம் பேசினதுல அவ என்கிட்டே பிரியமா இருப்பான்னுதான் தோணறது.''

''மன்னி!'' அவன் தன்னையறியாமல் உரக்கக் கத்தி விட்டான்.

அவள் சிரித்தாள்.

மீண்டும் அவன் பேசின போது அவன் குரலில் ஒலித்த பரிவும், பாசமும் அவனுடைய இதயத்தை ஊடுருவின.

''பிரசன்னா - முதலில் நீ இந்த வீட்டை ரீமாடல் பண்ண ஏற்பாடு பண்ணு. உங்கண்ணாக்கு இதுல எல்லாம் ஆர்வம் ரொம்பக் குறைச்சல். அப்புறம் கல்யாணப் பேச்சை ஆரம்பிக்கலாம் என்ன?''

''அதெல்லாம் சரி மன்னி. நித்யா என்னை விரும்பறாளான்னு தெரிஞ்சுக்க வேண்டாமா?''

''எனக்குத் தெரியும். நீ உன் கதைகளில எழுதற ஃபீமேல் இன்டியூஷன் எனக்கு நிறையவே இருக்கு.''

அவன் தலையைச் செல்லமாகக் கலைத்து விட்டு ராஜி போய் விட்டாள்.

விளக்கை அணைத்த பிறகு வெகு நேரம் வரையில் உறக்கம் வராமல் அவன் தவித்தான்.

இந்த மன்னிக்குத்தான் எத்தனை நல்ல இதயம்! யாராக இருந்தாலும், எப்படிப் பட்டவராக இருந்தாலும் இவளால் அன்பு செலுத்த முடிகிறது. இந்த மன்னி வந்த நாளிலிருந்து முகத்தில் சிரிப்பைத்தான் பார்த்திருக்கிறான். ஆத்திரமடைந்தோ, உரக்கப் பேசியோ இவன் பார்த்ததில்லை. இவள் யாரிடமும், எதையும் எதிர்பார்ப்ப தில்லை. அண்ணாவிடமும் கூடத் தனக்கு அது வேண்டும், இது வேண்டும் என்று கேட்டதாகத் தெரியவில்லை. அண்ணாவின் மீது வைத்திருக்கும் அன்பு இவளின் ஒவ்வொரு செயலிலும் பரிமளிக்கிறது. இது ஒரு சாதாரண கணவன் - மனைவிக்கிடையே இருக்கும் அன்பை விட மிக உன்னதமாக அவனுக்குத் தோன்றியது. ஆண்டாள் கண்ணன் மீது வைத்திருந்தது போன்ற அதீதமான பிரேமை... இல்லை - பக்தி. அவள் கால்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்ள வேண்டும் போல் தோன்றியது.

'நித்யாவும் இது போல என்னிடம் பிரியம் காட்டுவாளா?' என்ற நினைவுகளோடு அவன் கண்களை மூடிக் கொண்டு உறங்க முயற்சி செய்தான்.

(தொடரும்)

# அந்த ஜெயலலிதா கார்ட்டூன்!





கன்னடத்தில் பிரபலமாக இருக்கும் கார்ட்டூனிஸ்ட் பி. வி. ராமமூர்த்தி. மூர்த்தி என்கிற பெயரில் கன்னட நாளிதழான 'பிரஜாவாணி'யில் வரைவதோடு, டெக்கான் ஹெரால்டிலும் போடுகிறார். சில சந்தர்ப்பங்களில் இவரது நகைச்சுவை மிகுந்த கார்ட்டூன்கள் சட்டசபையிலும் சர்ச்சையைக் கிளப்பியிருக்கின்றன. என்றாலும், "யாரும் அதைத் தவறாக எடுத்துக் கொண்டதில்லை; யாரையும் புண்படுத்தியதுமில்லை. காரணம், ஒரு கார்ட்டூனை வரைவதற்கு முன்பு, யாரை வரைய நினைக்கிறேனோ, அந்த இடத்தில் என்னை வைத்துப் பார்ப்பேன். அப்போது என் மனம் அதனால் புண்படாது என்று கருதினால்தான் அந்தக் கார்ட்டூனையே வரைவேன்!" என்கிறார்.

ராமமூர்த்தி கார்ட்டூனிஸ்ட் மாத்திரமல்ல; சிறந்த ஓவியரும் கூட.. பெயின்டிங்குகளுக்காகப் பல முறை அவார்டுகள் வாங்கியிருக்கிறார். ஜெயலலிதா வீட்டின் மேல் கிளைடர் விமானம் பறந்து ஏற்படுத்திய சலசலப்பின்போது, ராமமூர்த்தி பிரஜா வாணியில் வரைந்த வசனமில்லாத கார்ட்டூன்தான் இது!

# K A R N A T A K A

Badami

Bhatkal Beach



Dasara Procession

Bandipur



Hampi

Folk Art (Yakshagana)

Mysore, city of palaces and temples is a good place to start your Karnataka holiday.

You will find Daşara in Mysore a feast of music and song, dance and gaiety. Capture the colour, the feeling of joyous festivity. And don't miss the magnificent Dasara procession.

This is the ideal time for a holiday. The weather is perfect; the rains have gone leaving behind a landscape painted a lush green. The air is crisp, fresh and cool. Look around – Karnataka offers such variety.

Step back a few centuries in time. Discover our graceful monuments, our immortal temples; treasures from a glorious past ....

Want to get away from the crowds? Take a wilderness break. Come to one of our many wildlife reserves and jungle lodges. They're comfortably wild.

Discover our coastline. Miles and miles of golden beaches and sunwarmed surf.

Veer off the beaten track. Head for the hills. Its coffee and spice country. Explore delightfully different Coorg. Fish. Swim. Trek. Do anything. Or nothing.

Exult in a holiday that's wonderfully different. A holiday that's truly relaxing. Come to Karnataka.

For information on where to go, what to see, how to make arrangements, contact:




**DEPARTMENT OF TOURISM**
Ist Floor, F Block, Cauvery Bhavan,
K.G.Road, Bangalore - 560 009.
Tel : 215489

கன்னட இலக்கியம் என்றாலே நம்மவர்களுக்கு சட்டென்று ஞாபகம் வருகிறவர் மாஸ்தி. (அதுவும் அவரது 'பிரதித்வனி' ஸீரியல் டி.வி.யில் வந்ததனால்?) அவருக்கு அடுத்த தலைமுறை இப்போது ஆட்சியில் இருக்கிறது. கே. டி. கட்டி, பூசந்தே, சித்தலிங்கையா, உஷா நவரத்னராம், அனுபமா, டி. சுனந்தம்மா.... இவர்களெல்லாம் தற்போதைய பத்திரிகை ஆக்ரமிப்பாளர்கள்.

# "முற்போக்கு பிற்போக்கு என்பதே பிற்போக்கு!"

– கன்னட எழுத்தாளர் உஷா நவரத்னராம் பேட்டி

உஷா நவரத்னராம்.

அரெளண்ட் அறுபதில் உள்ள இவர் தற்கால கன்னட எழுத்துலகில் பரபரப்பாகப் பேசப்படுகிறவர். நூற்றுக்கும் மேற்பட்ட சிறுகதைகளும் சுமார் ஐம்பது நாவல்களும் சிற்சில சினிமாக் கதைகளும் படைத்திருக்கிறவர். மிகுந்த முற்போக்குச் சிந்தனையாளராக இவர் கன்னட வாசகர்களிடம் கவனம் பெற்றிருந்தாலும், 'எழுத்தில், முற்போக்கு - பிற்போக்கு, சிவப்பிலக்கியம் - பச்சை இலக்கியம், தலித் இலக்கியம், ஆண் எழுத்தாளர் - பெண் எழுத்தாளர் - இப்படியான எந்தப் பாகுபாடுமே இருக்கக் கூடாது என்று அடித்துச் சொல்கிறார். நல்ல எழுத்துக்கு - வேறு எந்தவிதமான identification ம் தேவையில்லை என்னும் அவருடன் ஒரு சந்திப்பு.

"உங்களைப் பற்றிய முன்குறிப்பு கொஞ்சம்..."

"எனக்குத் தாய்மொழி மராட்டி. சொந்த ஊர் பூனா பக்கத்தில் ஒரு கிராமம். இங்கிலீஷ் லிட்ரேச்சரும், வரலாறும், ஜர்னலிஸமும் படித்திருக்கிறேன். பத்திரிகை ஆசிரியராகவும் பணியாற்றிய அனுபவம் உண்டு. திருமணத்திற்கு முன்பு ஆங்கிலத்தில்தான் எழுதிக் கொண்டிருந்தேன். அப்புறம் பெங்களூர் வர வேண்டியதாகி விட்டதால் மெல்ல மெல்ல கன்னடம் கற்றுக் கொண்டு, என் கணவரின் தூண்டுதலால் கன்னடத்தில் எழுத ஆரம்பித்து... ஓடிக் கொண்டிருக்கிறது!"

"தற்கால கன்னட எழுத்துலகம் எப்படி இருக்கிறது? பத்திரிகைகள் சரியான பாதையில்தான் போகின்றனவா? மக்கள் ரசனை எப்படி இயங்குகிறது?"

"மாஸ்தி போன்றவர்களெல்லாம் கன்னட எழுத்துலகத்தின் பிதாமகர்கள் என்று சொல்ல வேண்டும். அவர்கள் ஆரம்பித்து வைத்ததைத்தான் நாங்கள் தொடர்ந்து கொண்டிருக்கிறோம். என்னை விடுங்கள். புதிய இளைஞர்கள் பலர் உற்சாகமாக எழுதுகிறார்கள். புதிது புதிதான சிந்தனைகளை அவர்கள் முன்வைக்கிறார்கள். இங்கே 'கதா' போன்ற சில பத்திரிகைகளில் எப்போதும் தரமான படைப்பிலக்கியத்திற்கு இடம் இருக்கிறது. ஆனால் மக்கள் புரட்சிகரமான கருத்துக்களைப் பெரும்பாலும் ஏற்றுக் கொள்ள பயப்படுகிறார்கள். அவர்கள் எளிமையும், அமைதியும் கொண்ட வாழ்க்கையையே பெரிதும் விரும்புகிறார்கள். சிறிய சலனம் ஏற்பட்டாலும் கூட ரியாக்ஷன் அபரிமிதமாக இருக்கிறது."

"சலனம் என்று எதைக் குறிப்பிடுகிறீர்கள்?"

"சொல்கிற விஷயத்தில் மாறுதல். நிதர்சனத்தை உள்ளபடி சொல்லும் போது அதன் வெம்மையைத் தாங்க மறுக்கிறார்கள். உதாரணமாக, அகலுகனஸு (பகல் கனவு) என்கிற எனது நாவலை எடுத்துக் கொள்ளுங்கள். (பின்னாளில் திரைப்பட

மாகவும் வந்தது.) அது விலை மகளிர் வாழ்க்கை பற்றின கதை. இந்த நாவல் எழுதுவதற்காக, போலீஸ் கமிஷனர் உதவியுடன் அவர்கள் 'ஏரியா'வுக்கே கொஞ்ச நாள் தினசரி போய், அவர்களுடன் பேசி, பழகி தகவல் சேகரித்தேன். அங்கே இருந்த ஒவ்வொரு பெண்ணுக்குள்ளும் இன்னொரு பெண் உட்கார்ந்திருந்ததை என்னால் உணர முடிந்தது. எத்தனை, எத்தனை விதமான பிரச்னைகள் அவர்களுக்கு! அப்படியும் ஏன் இதில் வந்து வீழ்கிறார்கள், இதற்கு என்ன மாற்று... இப்படியெல்லாம் யோசித்து, சிரமப்பட்டு தகவல்கள் பெற்று, அந்நாவலை எழுதினேன். ஒரு போலீஸ்காரன், அப்படிப்பட்ட ஒரு பெண்ணுக்கு வாழ்வளிப்பதாக இறுதியில் முடித்திருந்தேன். எத்தனை பிரச்னை வந்தது தெரியுமா? பயங்கர எதிர்ப்பு! என்னை, 'ஆண்களுக்கு வக்காலத்து வாங்கும் பெண்' என்றெல்லாம் சொன்னார்கள். எனக்கு மனதில் கூட, நான் பெண், அவர்கள் ஆண் என்கிற உணர்வெல்லாம் இருந்ததே இல்லை. நான் பொதுவான மனித குலத்தின் பிரச்னைகள் பற்றி எழுதுகிறேன்.''

''பெண் எழுத்தாளர்களுக்கு இங்கே என்ன மாதிரியான மரியாதை கிடைக்கிறது?''

''பெண் பிள்ளை எழுதுகிறாள் என்றாலே இங்குள்ள மக்கள் ஒரு மாதிரியாகத்தான் பார்க்கிறார்கள்! பெண்களுக்கு சரியான ரெகக்னிஷன் எப்பவுமே கிடையாது. ஆண் எழுத்தாளர்களின் கதைக்கு ஒரு ரேட். பெண் எழுத்தாளர்களுக்கு ஒரு ரேட்! யார் கேட்பது இவர்களை? நானெல்லாம் எப்படியோ ஓர் இடத்தைப் பிடித்து விட்டேன். புதிதாக வருகிறவர்கள் பாடு திண்டாட்டம்தான்!''

''நீங்கள் ஏதாவது Association மாதிரி வைத்து உங்கள் பக்க நியாயங்களைச் சொல்லலாமே?''

''இருக்கிறது. பெண் எழுத்தாளர் சங்கம் என்றே இருக்கிறது. ஆனால் எனக்கு அதில் உடன்பாடு இல்லை. எனக்கென்னவோ ஆண், பெண் என்று பிரித்துப் பார்ப்பதே அருவருப்பாகப்படுகிறது. என்னைப் பற்றிச் சொல்ல வேண்டுமானால் கன்னட எழுத்தாளர் என்று சொல்லுங்கள். கன்னட பெண் எழுத்தாளர் என்று பிரித்துக் காட்டாதீர்கள்.''

''நாற்பது வருடங்களுக்கு மேலாக எழுதி வரும் உங்கள் எழுத்தின் அடிப்படை நோக்கம் என்ன?''

'' 'நல்ல எழுத்து' என்பதுதான். அதற்கு மேலே சமூகத்தின் பிரச்னைகளை அலசுவது என் கொள்கை. அவைகளுக்கான தீர்வைத் தேடிச் செல்வது என் நோக்கம். ஆதிக்க உணர்வை எதிர்ப்பது என் கதைகளின் அடிப்படை விஷயமாக இருக்கும்.''

''இவையெல்லாம் வெறும் சீர்திருத்தம் என்கிற அளவோடு நின்று விடும்



அபாயம் இருக்கிறதே. இதற்கான வாகனமாக இலக்கியம்தானா அகப்பட்டது?''

''இலக்கியம் என்பது சமூகத்திற்காக என்றே நான் கருதுகிறேன். என் கதை அழகியல் அடிப்படையில் அமைய வேண்டும் என்பதற்காக பிச்சைக்காரிக்கு பட்டு வஸ்திரம் போட்டுப் பார்ப்பதை நான் விரும்ப மாட்டேன். நான் பார்க்கிற உலகை, நான் கண்ட விதமாகவே மக்களுக்கு எடுத்துக் காட்டுவதுதான் என் எழுத்துக்கள்.''

**(உஷா நவரத்னராம் எழுதிய "இதுவும் நம் தேசம்" சிறுகதை 38 – ம் பக்கம்)**

(உஷா நவரத்னராம் எழுதிய "இதுவும் நம் தேசம்" சிறுகதை 38 – ம் பக்கம்)

**– பா. ராகவன்**

# கி

✱ பிருந்தாவன் - இரவுத் தோற்றம்

பெங்களூர் காலநிலை இத்தனை மோசமாக வரவேற்கும் என்று தெரிந்திருந்தால் வயிற்று வலி, கால் சுளுக்கு என்று எடிட்டரிடம் ஏதாவது கப்ஸா விட்டு ஜகா வாங்கியிருந்திருக்கலாம்.

சதாம் உசேன் மேல் புஷ்ஷு"க்கு இருந்த கோபத்தைப் போல சென்னை தகிக்கிறது; மொய்லி மேல்



✱ மாலாஸ்ரீ? மூச்.....!

# டத்தாய் வாழி காவேரி



* ஜோக் நீர்வீழ்ச்சி

பங்காரப்பாவுக்கு உள்ள கோபம் போல் சுடுகிறது பெங்களூர். ஒரு வாரம் ஹாய்யாக பெங்களூர், மைசூர் என்று சுற்றி வரலாம் என்று புறப்பட்டது தவறான கணிப்பாகி விட்டது. உக்கிரம் இல்லை என்றாலும் அக்கிரமம். துடைத்துக் கொள்ள துண்டு தேவையில்லை என்றாலும் கர்ச்சிப் அவசியம்.

* யக்ஷகானம்




* திப்புவின் உடல் கண்டெடுக்கப்பட்ட இடம்

கோடைதான் என்றாலும் 'முன்பு இப்படி இல்லை; இப்போ ரொம்ப மாறி விட்டது' என்கிறார்கள், கொஞ்சம் வயதானவர்கள். காரணம், பெங்களூர் சுற்றுவட்டாரத்தில் மரங்கள் பல (சமீபத்திய விழிப்புணர்ச்சி ஏற்படும் முன்) வெட்டப்பட்டதுதானாம். 'மறுபடி பழைய குளுமை வருமா?' என்றால், 'இளமை திரும்புமா' என்று கேட்பது போல்தான் என்கிறார்கள்.

பெங்களூர். பூங்காக்களின் நகரம். இந்திய நகரங்களின் கவர்ச்சிக் கன்னி. எட்ஸெட்ரா, எட்ஸெட்ரா. டூரிஸ்டுகளை ஈர்க்கும் வாசகங்களை மெய்ப்பிக்கும் வகையில் துடைத்து விடப்பட்ட சாலைகளும், துவைத்து எடுக்கப்பட்ட கட்டடங்களும் காட்சியளிப்பது என்னவோ வாஸ்தவம் தான். ஆனால் கறுப்பு நிற ஆட்டோக்களின் கர்ண கடூர பீப்பீ. சிவப்பு நிற அரசு ரதங்களின் தடதட இவற்றை டூரிஸ்ட் கைடுகள் பேசுவதில்லை. மெஜஸ்டிக் சர்க்கிள் வளாகத்தில் ரங்கநாதன் தெருவை தூக்கிச் சாப்பிட்டு ஏப்பம் விடும் பிளாட்பார ராஜாங்கம். பப்பாளிப் பழம் முதல் பர்மா பஜார் சமாசாரங்கள் வரை. கன்னடச் சுவர்களில் தெலுங்கு, தமிழ் போஸ்டர்கள். பிரதானமாய் விஜயசாந்தி. (ஏமி அனுகொண்டாவு?) சுமார் பிரதானமாய் எஸ்.பி.பி. (என்னமோ தெலுங்கு டப்பிங்) மற்றும் சிரஞ்சீவி, மதுபாலா இன்ன பிறர். ஒரு விஷ்ணுவர்த்தன்? அம்பரீஷ்? ராஜ்குமார்? மாலாஸ்ரீ? மூச்... இது கன்னட தேசம்தானா என்கிற சந்தேகம் எழுவது தவிர்க்கும்படி இல்லை!

**பெ**ங்களூரில் பார்க்கும்படியாய் நிறையவே இருக்கிறது. லால்பாக், கப்பன் பார்க். திரும்பின இடமெல்லாம் பாக், பாக், பாக். சென்னையின் பழுப்பும் அழுக்குமான பூங்காக்களைப் பார்த்துச் சலித்தவர்களுக்கு திகைக்க வைக்கும் பச்சைக் கம்பள விரிப்பு. இஸ்திரி போட்ட புல்வெளிப் பிரதேசங்களில் நடைபயில கால் கூசுகிறது. அதுவும் விதான் சௌதா என்கிற சட்டசபை வளாகம். (பாலு மகேந்திராவுக்கு பெங்களூரிலேயே ரொம்பப் பிடித்த லொக்கேஷன் என்று நண்பர் அமுதவன் சொன்னார்.)

விதான் சௌதா பற்றி இன்னும் கூட சில வரிகள் சொல்லலாம். நம் ஊர் மாதிரி அத்தனை கெடுபிடி இல்லை. சுலபமாக செகரட்டேரியட்டுக்குள் போக முடிகிறது. ஆச்சர்யம், மந்திரிகளின் பி.ஏக்களை அதை விட சுலபமாகப் பார்க்க முடிகிறது. அதை விட ஆச்சர்யம், மந்திரிகளையும் கூட அதிகப் பிரயத்தனம் ஏதுமின்றிச் சந்திக்க முடிவது. அதை விட ஆச்சர்யம் போக்குவரத்தை நிறுத்தாமல் மொய்லி போகிறார்!

அப்புறம் பெங்களூர் நகரப் பெண்கள். நம் சினிமாக்காரர்கள் தங்களது ஹீரோயின்களுக்காக இந்திர, மந்திர, சந்திர மண்டலங்களுக்கெல்லாம் சென்று பொறுக்கி வருவதாக அவ்வப்போது பத்திரிகைகளில் காசு கொடுத்து ஸ்டேட்மெண்ட் விடுகிறார்கள்.

எதற்கு இத்தனை சிரமப்படுகிறார்கள் என்று புரியவில்லை. ஒரு நடை இங்கு வந்தால் டஜன் கணக்கில் அள்ளிக் கொண்டு வந்து விடலாம்! பார்க்கும் இடமெல்லாம் பளிங்கு வெள்ளோட்டம்!

**இ**தற்கு மேலும் பெங்களூரில் இருந்து நிதானமாகப் பார்க்க நிறையவே இருக்கிறது. என்ன, டப்பு காவலா, அவ்வளவுதான். சாம்பின் பார்த்தாச்சு. இனி பிருந்தாவன். மைசூரிலிருந்து பஸ் பிடித்து ஒரு முக்கால் தூக்கம் போட்டு விழித்துக் கொண்டால் கிருஷ்ணராஜ சாகர். ரேஷன் கடை கெட்டது. டிக்கெட் கௌண்ட்டரில்



அப்படி ஒரு க்.......யூ! ஆள் நுழைய இரண்டு ரூபாய். கேமரா நுழைய பத்து ரூபாய்!

ஓவர் பிரிட்ஜின் கீழே காவிரித் தேக்கம்? கிரிக்கெட் ஆடலாம்! தண்ணீர் இல்லை? அதைப் பார்க்க நாம் காவிரி நீருக்காக சண்டை பிடிப்பது தப்போ என்று கூடத் தோன்றும். அந்த மாயைக்கு ஆளாகாதிருக்க தலையைச் சட்டென்று திருப்பிக் கொண்டு இந்தப் பக்கம் வந்தால்...

● திப்பு சமாதி





● ரங்கநாதர் ஆலயம்

ராட்சஸ விளக்குகளில் விட்டில் சாம் ராஜ்யம். எங்கோ தூரத்தில் ஹோவென்ற நீரிரைச்சல். இருபது நிமிடம் நடந்தால் பிருந்தாவன்.

பூச்செடியிலும் நீரூற்றிலும், சீரியல் செட்டிலும் என்னத்தைக் கண்டார்கள் இந்த ஜனங்கள் என்றால் அதுதான் சைகாலஜி. மோரில் சர்க்கரை சேர்த்து லஸ்ஸி ருசித்துச் சாப்பிடுவதில்லையா? அப்படி இயற்கையும் செயற்கையும் இணையும் போது ஏற்படும் ஒரு புதிய அழகு பலருக்குத் தேவைப்படுகிறது. அதை இங்கு மட்டுமே பெற முடிவதால் காணுமிடமெல்லாம் தலைகள், தலைகள், மேலும் தலைகள். இதனால் என்ன ஆபத்து என்றால் பிருந்தாவனத்தின் அழகை ரசிக்க முடியாத அளவுக்கு ஜனநெரிசல் தான் கண்ணில் படுகிறது. எரிச்சலே உண்டாகிறது. பிதுங்கும் கூட்டத்துக்கு முக்கிய காரணம் பாதுகாப்பு கருதி சில நாட்கள் மட்டுமே மக்கள் பிருந்தாவனத்தில் அனுமதிக்கப்படுவதுதான்.

இதற்கு நேர் எதிர் ஸ்ரீரங்கப் பட்டணம்! இதுவும் டூரிஸ்ட் சென்டர்தான். என்றாலும் மண்ணில் ஒரு மகத்தான நிசப்தம். ஜியாகரபி படி ஒரு குட்டித் தீவு. நாலு பக்கமும் காவிரி. (இப்போ முழங்கால் அளவு) சிதிலமடைந்த கோட்டை. உள்ளே நுழைகையில் சரித்திரம் கண்ணில் விரிகிறது. ஹைதர் அலி, திப்பு சுல்தான், ரங்கநாதர், டிஷ்யூம், டிஷ்யூம்...

ஊர் அமைப்பில் பத்து சதம் பதினேழாம் நூற்றாண்டு அப்படியே மிச்சம் இருக்கிறது. முன்புறம் ஓடு வைத்த வீடுகள். சுவரில் மாடம். காரை பெயர்ந்த காம்பவுண்ட் வால்களில் நர்த்தன ரூபங்கள். ஆடு மேயும் அகழி. அனுப்பில் தூங்கும் அரங்கநாதர். கோவில் வாசலில் - ஆச்சர்யம் ராக்கம்மா கையத்தட்டு! ஏதோ திருவிழா நடக்கிற 'பரபர' எப்போதும் இருக்கிறது.

ரங்கநாதருக்கு திப்பு வழங்கின வெள்ளிப் பாத்திரமெல்லாம் தற்சமயம் ரங்கநாதரிடம் இல்லை. வெயில் காலத்தில் திப்பு ஓய்வெடுத்த சம்மர் பேலஸில், கண்ணாடிக் கேஸ்களில் சௌக்கியமாக இருக்கின்றன.

ஆங்காங்கே மசூதிகள், தடுக்கி விழுந்தால் சமாதிகள். திப்புவின் சமாதி உள்ள பிரதேசத்தின் அழகு அதன் அமைதி காரணமாகவே அதிகரித்துக் காணப்படுகிறது. ஓரிரு சிவன் கோவில்கள். திப்பு கடைசியாக விழுந்த இடம் என்று ஒரு சதுர நிலம். அங்கே அத்து மீறுபவர்களுக்கு அபராதம் 5000 என்று அரசு சொல்கிறது!

அமைதியில் மிதந்து ஊருக்கு வெளியே வந்தால் மிலிட்டெரி ஹோட்டல்களும், கேடிவி பேருந்துகளும், லாரி கிளீனர்களும் மகா இரைச்சல் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். சல்லிக்காக அபராதம் கிடையாது!

இனி தர்மஸ்தலா. மைசூரிலிருந்து பத்து மணிதூர மலைப் பிரதேசம். எலும்பை நிமிண்டும் சீதோஷ்ணம் (இங்காவது வாய்த்



# சுற்றுலாத் துறைக்கு ஊக்கம்; ஊழலுக்கு எதிர்ப்பு!

● பெரிக்கல் மல்லப்பா

**"பங்காரப்பாவின் நிர்வாகம் சீராக இருக்கவில்லை. நான் ஊழலை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது!" என்று வெளிப்படையாகப் பேசும் பெரிக்கல் மல்லப்பா, இன்று மொய்லியின் அமைச்சரவையில் சுற்றுலா மற்றும் பொது மக்கள் குறை தீர்க்கும் துறைகளுக்கு அமைச்சர்.**

"சுற்றுலாத் துறையும், பொது மக்கள் குறைதீர்க்கும் துறையும் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாதவை ஆயிற்றே?"

"சுற்றுலாத்துறை ஒரு குறிப்பிட்ட வட்டத்துக்குள்ளே இயங்கக்கூடியது. பொது மக்கள் குறைகள் என்பது எல்லா இலாக்காக்களையும் சார்ந்தது. சிவப்பு நாடா முறை, எதையும் கிடப்பில் போட்டுத் தாமதம் செய்வது, டிரான்ஸ்ஃபர் பாதிப்பு போன்ற மக்களின் பிரச்னைகளைக் கூடுமான வரை தீர்த்து வைப்பது ஓர் அரசின் முக்கிய வேலை... மாதத்துக்குச் சுமார் 1000 கோரிக்கைகள் இது மாதிரி வருகின்றன!"

"சுற்றுலாத் துறைக்கு எந்தெந்த வகைகளில் கர்நாடக அரசு ஊக்கம் அளிக்கிறது?"

"வடக்கே தீவிரவாதச் செயல்களின் காரணமாக உண்டான அமைதியின்மை, கர்நாடகம் உள்ளிட்ட தென்னாட்டுப் பகுதிகளுக்குச் சுற்றுலாப் பயணிகள் ஏராளமாக வருகை தரும் சூழ்நிலையை உருவாக்கியிருக்கிறது. இதைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டியது நம் கடமை. பதினைந்து முதல் இருபத்தைந்து சதவிகித மான்யம் ஓட்டல் துறைக்குக் கொடுக்கிறோம். ஏழு வருடங்களுக்கு வரிவிலக்குகள் அளிக்கிறோம். சுற்றுலா தொடர்பான பொழுதுபோக்கு இடங்களையும், ஓட்டலுக்கான நிலத்தையும் வாங்கும் போது பதிவுக் கட்டணத்தில் கூட பாதிக்கு மான்யம் கொடுத்து விடுகிறோம்."

"நகரங்களில் மட்டும்தானே இம்மாதிரி ஓட்டல்கள் சாத்தியம்?"

"கடற்கரைப் பகுதிச் சுற்றுலாவுக்கும் நாங்கள் அதிக முக்கியத்துவம் கொடுத்து வருகிறோம். இந்த 'பீச் டூரிஸம்' உள்நாட்டுப் பயணிகளைப் போலவே, அயல்நாட்டுப் பயணிகளையும் கவர்ந்து ஈர்க்கக்கூடியது. சுமார் 160 கிலோ மீட்டர் தூரத்துக்குக் கடற்கரை கொண்டது கர்நாடகம். இதைப் பயன்படுத்தி, வாட்டர் ஸ்போர்ட்ஸ், ரிவர் ஸ்போர்ட்ஸ் என்று ஆங்காங்கே நிறைய வாய்ப்புக்கள் அளிக்க முடியும். இதில் தனியார் துறைக்கு ஆதரவு அளித்து, பீச் காட்டேஜ்கள் போன்றவை கட்ட முடியும். அடர்ந்த வனப்பகுதிகள் சில சுற்றுலாப் பயணிகளுக்குப் பிடிக்கும். அவையும் இங்கே நிறைய இருக்கின்றன. சாகசச் சுற்றுலாவான அட்வென்சர் டூரிஸத்துக்கும் மலை ஏற்றம் போன்ற வசதிகள் இங்கே அமைந்

தநே!) ஊட்டி, கொடைக்கானலெல்லாம் பிச்சை வாங்க வேண்டும்! எழிலோ, எழிலோ, எழிலோ, எழில்!

மஞ்சுநாதர் ஆலயம். வீரேந்திர ஹெக்டே குடும்பத்தின் குலதெய்வம். கேரள பாணி. நம்பூதிரிகள் அரசோச்சும் பிரதேசம். இந்த ஊர் கடவுள் யாருக்கும் 'ஸ்பெஷல்' தரிசனம் தருவதில்லை. இலவசமாகவே காணக் கிடைக்கிறார்! தவிரவும் கோவிலில் உண்டியல் ஏதுமில்லை. சன்னதிக்கு எதிரே மண்டபத்தில் எப்போதும் வேதம் ஒலிக்கிறது. இந்த கர்நாடகக் கடவுளின் அம்பாள் திருநாமம் கன்னியாகுமரி! கோவில் ஏரியாவில் அதிகம் புழங்குவது தமிழ், தெலுங்கு, மலையாளம். கன்னடம் காணவில்லை! சுற்றுப்புறங்களில் டீத் தோட்டம், முட்ட முட்ட முந்திரி, பார்க்கப் பார்க்க பலாக்களை. மீதமிருக்கும் இடங்களில் மிளகுக் கொடிகள்!

இதெல்லாம் ரெண்டாம்பட்சம். முதல் பட்சம், அந்தச் சாப்பாடு! இலவச உணவில் இத்தனை சுவையா? தவிர, ஒரு நட்சத்திர ஹோட்டலின் வசதிகளுக்குக் குறைவில்லாத தங்கும் (இதுவும் இலவசம்) விடுதி. திரும்ப மெட்ராஸ் வந்துதான் ஆக வேண்டுமா என்று சிலபல முறை யோசிக்க வேண்டியிருந்தது!

அடுதலாய் இன்னொரு பக்திப் பிரதேசம். சிரவணபெலகுளா (வாயில் காராபூந்தி போட்டாற்போலில்லை?) 27 மீட்டர் கோமதீஸ்வரர். வெயிலோ, மழையோ கால் கடுக்க வருஷக்கணக்காய் நின்று கொண்டிருக்கிறார்! 'பல்லவன் பஸ்ஸுக்காக நாம் காத்து நிற்பதை விடவா' என்று தோன்றுகிறது.

மலை மேல் கோவில். காலை எட்டரைக்குத் திறக்கிற நேரம், சாரை சாரையாக நிர்வாண சாமியார்கள்! மயில் இறகால்

திருக்கின்றன.''

''இதில் அயல்நாட்டு இந்தியர்கள் முதலீடுகள் செய்யும் வாய்ப்பு உள்ளதா?''

''பெங்களூரிலேயே உல்லாச ஓய்விடங்களையும், பொழுதுபோக்குப் பூங்காக்களையும் அமைக்க, சில வெளிநாட்டில் வாழும் இந்தியர்கள் முன்வந்திருக்கிறார்கள். இவை டிஸ்னிலாண்ட்டை மாதிரியாகக் கொண்டவை!''

''மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்த உள்நாட்டுச் சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை கணிசமானது. இவர்களுக்காக உங்கள் துறை என்ன செய்கிறது?''

''இதில் பெரும்பாலானவர்கள் சரித்திர சம்பந்தமான இடங்களான பாதாமி, படத்கல், ஹம்பி முதலிய ஊர்களுக்கும், உடுப்பி, சிருங்கேரி, மூகாம்பிகை கோயில் போன்ற வழிபாட்டுத் தலங்களுக்கும் போய் வருகிறவர்கள். குறிப்பாகச் சொல்லுவதென்றால் இவர்கள்தான் 80 சதவிகித உள்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள். யாத்ரி நிவாஸ் போன்றவற்றை இம்மாதிரி ஊர்களில் கட்டியிருக்கிறோம். ஓட்டல் வசதிகளையும் அதிகரித்திருக்கிறோம். தனியார் டூர்கள் தவிர, இலாகாவே நடத்தும் உல்லாசப் பயணங்களையும் வாரத்தில் ஏழு நாட்களும் அளிக்கிறோம். மைசூர், ஹாஸன், பெல்லாரி போன்ற இடங்களுக்கு, சிறு விமானப் போக்குவரத்து அனுமதிக்க மத்திய அரசைக் கேட்டுக் கொண்டிருக்கிறோம்.

''தட்சிண கர்நாடகத்தில் யக்ஷகானம் போன்ற கலை, கலாசார நிகழ்ச்சிகள் நிறைய உண்டு. உள்நாட்டு, அயல்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள் இவற்றில் அதிக ஆர்வமும் ஈடுபாடும் காட்டுகிறார்கள். எல்லா மாவட்டத் தலைநகரங்களிலும் ஆண்டுக்கு ஒரு முறை, உள்ளூரிலேயே பிரபலமான கலைக் குழுக்களின் இசை-நடன நிகழ்ச்சிகளை ஒரு விழா போல நடத்தி வருகிறோம்.''

''சுற்றுலாத் துறை வளர்ச்சிக்காக மத்திய அரசு உங்கள் மாநில அரசுக்கு எந்த வகையில் உதவுகிறது?''

''இருபத்தேழு கோடி ரூபாய்க்குத் திட்டங்கள் சில அளித்தோம். தற்போதைக்குச் சுமார் இரண்டரைக் கோடி ரூபாய் அளித்திருக்கிறார்கள். மேலும் உதவுவார்கள் என்று நம்பிக்கையோடு இருக்கிறோம்!'' என்று கூறும் அமைச்சர் பெரிக்கல்

* பீச் டூரிஸம்



மல்லப்பா, ''நாள் முழுக்க நின்று பார்த்தாலும் அலுக்காத ஜோக், அக்நாரி நீர்வீழ்ச்சிகள். பந்திப்பூர் வனவிலங்குச் சரணாலயம், மாண்டியாவிலுள்ள பீமேசுவரியில் மீன்பிடி முகாம் என்று கர்நாடகச் சுற்றுலா மையங்கள் நிறையவே இருக்கின்றன!'' என்று பட்டியலிடுகிறார்.

**- சித்தார்த்**

சாலை வருடல். மந்திரம் ஒலிக்கும் உதடுகள். மற்றபடி சிந்தனை ஒன்றுடையார்.

கோவிலைச் சற்று உற்று நோக்கினால் முற்காலத்தில் ஒரு சிவன் கோவிலாக இருந்திருக்கலாமோ என்ற சந்தேகம் எழாமல் போகாது. விஷ்ணு, லட்சுமி, நடராஜர் சிற்பங்களுக்கிடையே நிர்வாண தீர்த்தங்கரர்கள். உற்சவ கோமதீஸ்வரருக்கு வேஷ்டி சாமியார்கள் அபிஷேகம் செய்கிறார்கள். பெருமாள் கோவில் போல தீர்த்தப் பிரசாதம்!

அப்புறம் ஒட்டுமொத்த கர்நாடகாவின் சாப்பாடு சாத்தியங்கள். எங்கே போனாலும் நார்த் இண்டியன் ஸ்டைலில் முதலில் நாலைந்து சப்பாத்தியைப் போட்டு வயிற்றை அடைத்து விடுகிறார்கள். அப்புறம் தட்டு நிறைய சாதத்தைக் காட்டி கேலி பண்ணுகிறார்கள். சாம்பார், ரசம், பொரியல், கூட்டு என்று சகலத்திலும் சர்க்கரை! (ஊறுகாய்தான் பாக்கி) டூரின் முதல் நாள் ஒரு மாதிரி இருக்கும். அப்புறம் பழகி விடும்!

ஹோட்டல்களில் ரொம்ப விரும்பிச் சுவைக்கும்படியான பொருள் தண்ணீர்! வஞ்சனையில்லாத தேன் காவிரி! பாலாறு என்கிற பெயரில் என்னமோ கலங்கலை காலம் காலமாகப் பருகிச் செத்து விட்ட நாக்கு, எழுந்து டான்ஸ் ஆடாத குறை! ஏனைய தமிழர்கள் பொறாமைப்படும் அளவு காவிரித் தண்ணீரோடு பரிச்சயம் பண்ணிக் கொண்டு மெட்ராஸ் வந்த நேரம் - தலைவலி, ஜுரம்! டாக்டர் சொன்னார், தண்ணீர் மாற்றம்தான் காரணம் என்று!

**- நமது நிருபர்**

அட்டை வண்ணப்படங்கள், கர்நாடகம் தொடர்பான படங்கள் : **கோபிநாத்**

நான் பஸ்ஸி லிருந்து இறங்கிச் சுற்று முற்றும் பார்த்தேன். எனக்குப் பரிச்சயமானவர்கள் யாரும் இல்லை. பஸ் நிலையத்தில் ஜனசந்தடி அதிகமாயிருந்தது. தோளிலிருந்த பையைச் சரிசெய்து கொண்டு நடக்க ஆரம்பித்தேன்...

பத்திரிகை ஆசிரியர்கள் அவர்கள் பாட்டுக்குச் சொல்லி விடுகிறார்கள். ''போங்கள்... அங்கே இங்கே சென்று செய்திகளைச் சேகரித்துக் கொண்டு வாருங்கள். புதிய செய்திகளாக வித்தியாசமான செய்திகளாக இருக்க வேண்டும். வெறும் அரதப் பழசான செய்திகளைப் போட்டால் நம்ம பத்திரிகையை எவன் படிப்பான்? சென்சேஷனலாக - ஒரு பரபரப்பாக இருக்க வேண்டும்.''



# இதுவும்

ஆனால் நான் பரபரப்புக்கு எங்கே போவேன்? நம்மில் எல்லாமே புராதனம் தான். அடிதடி, கோஷ்டிப் பூசல், மதச் சண்டை, வரதட்சணைக் கொடுமை, கற்பழிப்பு, போலீஸ்காரர்களின் அட்டூழியம், அரசியல் குளறுபடிகள், மந்திரிசபை மாற்றங்கள், கட்சித் தாவல்கள், வெளிநாட்டு ஆயுதக் கடத்தல்கள் இம்மாதிரியானவைதானே...

''சார், கூலி வேணுமா சார்?''

திரும்பிப் பார்த்தேன்.

அழுக்கான வெள்ளைச் சட்டை. நீல நிறத்தில் அரைக்கால் நிஜாருடன் அந்தப் பையன் நின்றிருந்தான். அவனுடைய கண்களில் இருந்திருக்க வேண்டிய பிரகாசம் இருக்கவில்லை. ஆனால் 'நான் பிச்சைக்காரனில்லை. மரியாதையாய்ப் பிழைக்கிறவனாக்கும்' என்கிற பாவனை இருந்தது.

''வேணாம்ப்பா... ஒரேயொரு சூட்கேஸ்தான் இருக்கிறது. ஒரேயொரு பை... அதையும் தோளில் மாட்டிக் கொண்டிருக்கிறேன்'' என்றேன். உடனே அவன் முகத்தில் ஏமாற்றம். அந்த ஏமாற்றம் என்னை இழுத்திருக்க வேண்டும்.

''சரி இந்தா இந்த சூட்கேஸ்... இங்கே ஏதாவது ஓட்டலோ லாட்ஜோ இருக்கா?''

''இருக்கு சார்... ஆனால் டிபன் சாப்பாடு எல்லாமே ரொம்ப விலை... மட்டுமல்லாமல் அவ்வளவாய் சுத்தமும் கிடையாது.''



கன்னடமூலம்: உஷா நவரத்னராம்

# நம் தேசம்

''ஓட்டல்னா அப்படித்தான்... வீடு போல இருக்க முடியுமா என்ன?''

''பத்மா லாட்ஜ் இருக்கு சார். ரூம் வாடகை நாற்பத்தஞ்சு ரூபாய்... குளிக்க வெந்நீர் தருவாங்க. பிளேட் மீல்ஸ் அஞ்சு ரூபாய் சார்ஜ் பண்ணுவாங்க. பீட்ரூட், முட்டைக்கோஸ், முள்ளங்கி இதே காய்கறிதான் தினந்தோறும்...'' மடமடவென்று நினைத்துக் கொண்டவனாக அவன் தொடர்ந்தான்... ''அ... இன்னும் ஊருக்கு உள்ளே போனால் ராக்லாட்ஜ் ஓட்டல் இருக்கு சார். ரொம்பவும் விலை. அங்கே எல்லாமே உண்டு. ஆனா ரூமுக்கு நூத்தைம்பது - இருநூறு ரூபாய் தர வேண்டியிருக்கும்... அப்புறம் - பிருந்தாவன் ஓட்டல்...''

விட்டால் சொல்லிக் கொண்டே போவான் போலிருந்தது. ''ஓட்டல்களுக்கு நீ விளம்பரக்காரனா என்ன... உனக்குக் கமிஷன் எதுவும் தர்றாங்களா?''

''இல்லை சார்... எல்லாம் சும்மா கேட்டுத் தெரிஞ்சு வைச்சிருக்கேன். உங்க மாதிரி யாராச்சும் புதுசா வந்தாங்கன்னா அவங்களுக்கு வழிகாட்டணும் இல்லையா?''

''பரவாயில்லை. நல்ல சூட்டிகையாய்த்தான் இருக்கே. நான் இந்த ஊருக்குப் புதுசுன்னு உனக்கு எப்படித் தெரிஞ்சது?''

''இதென்ன பிரமாதம் சார்... நீங்க பஸ்ஸிலிருந்து இறங்கி சுற்றுமுற்றும் பார்த்தீங்களே அப்பவே தெரிஞ்சுக்கிட்டேன்.''

''என்ன படிச்சிருக்கே?''

''எங்கிருந்து படிக்கிறது சார்...? ஆறாவது வரைக்கும் படிக்க நிறுத்திட்டேன்.''

''ஆறாவது வரை படிச்சுட்டு ஏன் கூலி வேலை பார்க்கிறே?''

''எனக்கு யார் வேலை தருவாங்க சார்? ஹோட்டல்ல கொஞ்ச நாள் வேலை பார்த்தேன். அங்கே தந்த சம்பளத்துல தம்பி, தங்கச்சி, அம்மா எல்லாரையும் பிழைக்க வைக்க முடியுமா என்ன?''

''இந்தக் கூலி வேலையில எவ்வளவு கிடைக்குது?''

''உங்க மாதிரி ஆளுங்க எங்க மேல கருணை வச்சு ஏதாவது தர்றீங்க... ரெண்டு வார்த்தை நல்ல மாதிரியாய்ப் பேசறீங்க... வெறும் கூலி மட்டுமில்லை... வேறு சின்னச் சின்ன வேலையெல்லாம் கூடப் பார்க்கறேன் சார்.''

''சரி.. எனக்கு ஏதாவது ஒரு நல்ல ஓட்டல்ல பத்துப் பதினைஞ்சு ரூபாய்க்கு ரூம் கிடைக்குமா?''

பையன் என்னை ஏறிட்டான். ''லாட்ஜ் வாடகையெல்லாம் அதிகமாயிப் போயிருக்கு சார்... வேணும்னா ஒண்ணு பண்ணலாம். சாப்பாடு மட்டும் ஓட்டல்ல சாப்டுட்டு வேறெங்காவது போய்த் தங்கணும்... ஸ்கூல் வெராந்தா, கோவில் பிராகாரம் இப்படி...''

ஆமாம்... இவன் சொல்வதும் சரிதான். சாப்பாடு ஐந்து ரூபாய். அதை மட்டும் ஓட்டலில் சாப்பிட்டுக் கொண்டால் ஆயிற்று. ஓட்டல் அறையில் தனியாக இருக்க எனக்கும் என்னவோ போல் இருந்தது... ''சரி நல்ல ஓட்டல்ல வயிறு நிறைய சாப்பிடலாம் வா'' என்றேன்.

''வேணாம் சார்... நீங்க சாப்டுட்டு வாங்க... சூட்கேஸையெல்லாம் நான் பார்த்துக்கிட்டு வெளிலயே நிக்கிறேன். கூலி கூட அப்புறமாத் தரலாம்.''

''அதெல்லாம் வேணாம்... நீயும் வா... ஒண்டியாய் சாப்பிட பேஜார்... வா ஓட்டலைக் காட்டு. ரெண்டு பேரும் சாப்பிடுவோம். அப்புறம் தூங்கறதுக்கு ஏதாவது இடம் காட்டு.''

அவனைப் பிடிவாதமாக இழுத்துக் கொண்டு ஓட்டல் ஒன்றிற்குப் போய் உட்கார்ந்தேன். எல்லார் பார்வையும் என் மீதும் அவன் மீதும் ஆச்சரியத்துடன் விழுந்தது.

''டூ பிளேட் மீல்ஸ்'' - பையன் கத்திய போது ஓட்டல் முதலாளி அவனைப் பார்த்துச் சிரித்தார். ''என்னடா கிருஷ்ணா... உங்க சொந்தக்காரரா?'' என்றார் என்னைப் பார்த்து.

சரிதான் பையனின் பெயர் கிருஷ்ணா என்பது தெரிந்தது. இவன் எல்லாருக்கும் பரிச்சயமானவன் என்பதும் தெரிந்தது. அவன் ஓட்டல்காரருக்கு எந்த பதிலும் சொல்லவில்லை.

இருவரும் வயிறுநிறையச் சாப்பிட்டு விட்டு ஓட்டலிலிருந்து வெளியே வந்தோம்.

''இப்ப எனக்குப் படுத்துக்க இடம் காட்டு'' என்றேன்.

அவன் சிறிது தூரம் மௌனமாகவே நடந்தான். தெருவின் மூலை வந்ததும் ''சார்... இத பாருங்க ஸ்கூல்ல படுத்தீங்கன்னா கொசுத் தொல்லை.. எலித் தொல்லை இருக்கும். கோவில் பிராகாரத்தில் திருடங்க பயம்... மாதேவப்பா கடை முன்னாடி தெருப் பிச்சைக்காரங்கள்ளாம் வந்துருவாங்க. அரசமரத்தடியிலும் வேணாம் சார், பேய் இருக்குன்னு சொல்றாங்க.''

''இதையெல்லாம் மொதல்லேயே சொல்லியிருக்கக் கூடாதா?'' என்று கோபித்துக் கொண்டேன்.

''கவலையே படாதீங்க சார்.. இங்கே பக்கத்துலேயே எனக்கு ரொம்ப வேண்டியவங்க ஒருத்தரோட வீடு ஒண்ணு இருக்கு... ரொம்ப நல்லவங்க... ஒரு ராத்திரிதானே அங்கே தங்கிப் போகலாம்.''

''வேணாம்... கண்டவங்க வீட்டுக்கெல்லாம் எதுக்குப் போறது? நாளைக் காலை வரைக்கும் எங்கேயோ இருந்தாப் போச்சு. நாளை மத்தியானம் இங்கு நடக்கும் நிகழ்ச்சியை முடிச்சுட்டுப் புறப்பட்டுருவேன்.''

''என்ன நிகழ்ச்சி சார்? எனக்குத் தெரியாதே.''

''உனக்குத் தெரியாதா? நாளைக்கு இங்கே எம்.எல்.ஏ. பரமசிவப்பா பேசறார் இல்லையா? அவர் ஜனங்களுக்காகச் செய்திருக்கும் சாதனைகளையெல்லாம் சொல்லப் போறார்.''

''ஓ... அதுவா! விடுங்க சார்... யார் பேசி என்ன ஆகப் போகுது? நம்ம மாதிரி ஆட்களின் நிலைமையெல்லாம் ஒண்ணே தான். அதோ பாருங்க அங்க தெரியுதே சிவப்பு ஓட்டு வீடு... வீட்டு முன்னால சேலை கூடக் காயுது பாருங்க அதேதான்.''

''அதுவே ரொம்பச் சின்ன வீடா இருக்கே... அங்க யார் யார் இருக்காங்களோ... அங்க போய் எதுக்குத் தொந்தரவு செய்யணும்?''

''தொந்தரவு ஒண்ணும் கிடையாது... எவ்வளவோ பேர் இங்க வந்து தங்கிட்டுப் போறாங்க... உங்களுக்கு எவ்வளவு விருப்பமோ அவ்வளவு கொடுத்தால் போதும். அவங்களுக்கும் உபயோகம்.... உங்களுக்கும் பிரயோசனமாயிருக்கும். பேசாம வாங்க சார்.'' கிருஷ்ணா என்னுடைய கையைப் பிடித்துக் கூட்டிக் கொண்டு போனான்.

வீட்டின் படிகளில் சிதைந்து செங்கல் தெரிந்தது. சிமெண்ட் உதிர்ந்திருந்தது. கதவில் பழைய புடைவையைப் படுதாவாகக் கட்டியிருந்தார்கள். முன் அறையில் நுழைந்ததும் உள்ளிருந்து வந்த ஊதுவத்தி வாசனை கும்மென்று மூக்கைத் துளைத்தது. பழைய பாய் ஒன்று, சின்ன ஸ்டூல் ஒன்று... நைந்து போன மெத்தையின் மீது சாயம் போன போர்வை. உள்ளறையில் யாரோ நடமாடும் சத்தம்.

''இருங்க சார் வரேன்'' - அந்த அறை

யில் என்னை நிறுத்தி விட்டு அவன் உள்ளே போனான். போன வேகத்திலேயே திரும்பினான். அவன் கையில் படுக்கை விரிப்பு... மெத்தையின் மீது அதை விரித்தான். ''உக்காருங்க சார்... நீங்க இங்க ஜாலியாய்ப் படுக்கலாம். காலையில வந்து எழுப்பறேன். அதுவரை நல்லாத் தூங்குங்க. எல்லாத்துக்குமாச் சேர்த்து மொத்தமாய்ப் பணம் கொடுத்துருங்க.''

''இங்கே படுத்துக்க சார்ஜ் எதுவும் கிடையாதா?'' என்றேன்.

கிருஷ்ணா ஒரு மாதிரியாய்ச் சிரித்தான். ''உங்க சந்தோஷம்தான் முக்கியம் சார்... அப்படியெல்லாம் அவங்க எதுவும் தொந்தரவு படுத்த மாட்டாங்க.''

எப்படியிருந்த போதிலும் ஓட்டலுக்குப் போயிருந்தால் நாற்பதோ ஐம்பதோ கொடுத்திருக்க வேண்டும்... பாக்கெட்டிலிருந்து பர்ஸ் எடுத்து இரு பத்து ரூபாய் நோட்டுக்களையும் ஒரு ஐந்து ரூபாய் நோட்டையும் உருவினேன். அந்தச் சிறுவனின் கையில் வைத்தேன். ''அவங்களுக்குக் கொடுத்துரு. ரொம்பவும் உபகாரமாச்சன்னு சொல்லு.''

கிருஷ்ணவின் முகம் ஊர் அகலத்துக்கு விரிந்தது. வேகமாய் உள்ளே ஓடினான். உள்ளறையில் கிசுகிசுப்பாய் என்னவோ பேசிக் கொண்டது கேட்டது. ஒருவேளை நான் கொடுத்த பணம் குறைச்சலோ... அதிகம் தந்திருக்க வேண்டுமோ... என்று யோசனையில் இருந்தபோதே அவன் உள்ளிருந்து வந்தான். அவனுடைய கையில் பளபளவென்று மின்னிக் கொண்டிருந்த பித்தளைத் தட்டு ஒன்றிருந்தது. அதில் ஒரு தம்ளரில் பால், நான்கு வாழைப் பழங்கள், வெற்றிலை பாக்கு... என்றிருந்தன. நான் சிரித்து விட்டேன்.

''இதெல்லாம் வேணாம் கிருஷ்ணா. ஒரு பழம் போதும்... மீதியை நீ எடுத்துக்க, பாலை உள்ளே கொடுத்துரு.''

அவன் எதற்காகவோ தயங்கினான். ''இல்லை... இங்கேயே இருக்கட்டும். அப்புறமா நீங்களே அவங்ககிட்டச் சொல்லிருங்க... நான் வரட்டுமா சார்?''

தட்டை அங்கேயே வைத்து விட்டுக் கிளம்ப முயன்றான் அவன். நான் மூன்று பழங்களை எடுத்து பலவந்தமாய் அவன் கையில் திணித்தேன். அவன் வெளியே ஓடினான். ஓடியவன் என்னுடைய அறைக் கதவை வெளிப்பக்கமாக இழுத்துத் தாழ் போட்டுக் கொண்டு போனான்.

நான் என்னுடைய பையிலிருந்து பெட் ஷீட்டை எடுத்தேன். போர்த்திக் கொண்டு படுத்துத் தூங்க ஆரம்பித்தேன்.

எவ்வளவு நேரம் ஆகியிருக்குமோ தெரியாது. திடீரென்று யாரோ பக்கத்தில் வந்து படுத்தாற்போல் இருந்தது.

சுற்றிலும் இருள்.

ஒருவேளை கிருஷ்ணாவாக இருக்கலாம். மெதுவாகக் கையால் தடவிய போது மென்மையாகவும் இதமாகவும் ஸ்பரிசம் பட்டது.

நான் திடுக்கிட்டேன். ''யாரது?''

பதிலில்லை.

சட்டென்று எழுந்து விளக்கைப் போட்டேன்.

அழகான ஒரு பெண் என்னுடைய படுக்கையில் படுத்திருந்தாள்.

''ஏய் யார் நீ? எதுக்காக இங்கே வந்தாய்? என்னை என்னவென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்?'' நான் கத்தினேன்.

அவள் என்னுடைய கத்தலில் மிரண்டு போயிருக்க வேண்டும். தேகம் மெல்ல நடுங்கிற்று... ''வாழைப்பழம்... பால்... இதெல்லாம் ஏன் எடுத்துக்கலை? நான்



## மயக்கம் தரும் விலை!

இந்தப் படத்திலுள்ள டைனிங் டேபிளின் விலை ஒரு லட்சத்து இரண்டாயிரத்துச் சொச்சம் என்றால் நம்ப முடிகிறதா? பெங்களூரிலுள்ள கைவினை பொருள்கள் விற்பனைக் கூடமான 'காவிரி'யில், விற்பனைக்குத் தயாராக இருக்கிறது. டேபிளின் முழுவதும் ஆங்காங்கே தந்த வேலைப்பாடுகள் இருப்பதால்தான் இந்த விலை! இத்தனை விலை கொடுத்து வாங்கவும் ஆளிருக்கிறார்களா? உண்டு; வெளிநாட்டில்!

கிருஷ்ணா மூலம் அனுப்பிவேனே...'' அவள் சன்னமான குரலில் கேட்க, எனக்குக் கோபம்தான் வந்தது.

எதுவும் பேசாமல், விழுந்து கிடந்த பெட்ஷீட்டை எடுத்து மடித்துப் பையில் வைத்துக் கொண்டேன்.

அந்தப் பெண் இப்போது எழுந்து தலையைக் கவிழ்த்தவாறு உட்கார்ந்திருந் தாள்.

''நான் தூங்க இடம் கேட்டு வந்தேன்... கூடப் படுக்கத் துணை கேட்டு வரலை.''

எழுந்து வாசல் பக்கம் போனேன். கதவு வெளிப்பக்கம் பூட்டியிருந்தது. ஆத்திரத் துடன் பலவந்தமாய்க் கதவை இழுத்துத் திறக்க முயன்றேன்.

அந்தப் பெண் நடுங்கியவாறே அங் கேயே நின்றிருந்தாள். இதற்குள் வெளியி லிருந்து கதவு திறக்கும் சப்தம் கேட்டது.

கிருஷ்ணா நின்றிருந்தான்.

அவன் அருகில் ஒரு சின்னப் பெண் ணும் பையனும் இருந்தனர். களேபரம் கேட்டு அப்போதுதான் தூக்கம் விழித் திருக்க வேண்டும். வெளியில் அவர்கள் படுத்திருந்ததற்கான பாய் இருந்தது.

''கிருஷ்ணா நீ இங்கேயா இருந்தாய்?'' என்றேன் அவனைப் பார்த்து.

அவன் தலையாட்டினான்.

''என்னை எதுக்காக இங்கே கூட்டி வந்தே? என்னை என்னன்னு நினைச் சிருக்கே... நான் என்னமோ உன்னை நல்ல பையன்னு நினைச்சிருந்தேன்... எத்தனை நாளாய் இந்த வேலை?''

''நாலு வருஷமாய்ப் பண்றேன் சார்'' என்றான் அவன். ''உங்களைப் போன்ற நல்லவங்களைக் கூட்டி வந்து தங்க வச்சால் நாலு காசு கிடைக்கும் சார்... வயிறு நிறைய தம்பி, தங்கை, தாய் எல்லாரும் சாப்பிட முடியும்.''

''உங்க அம்மாவுக்கு நீ பண்ற வேலை தெரியுமா?''

அவன் தலைநிமிர்ந்தான் ''தெரியும் சார்.''

''இந்தக் கேவலமான வேலையை விட் டுட்டு மரியாதையாய்ப் பிழைக்கக் கத் துக்கோ. மொதல்ல இந்தக் கெட்ட பொம் பளையை விட்டு விலகு. உன்னுடைய தம்பி தங்கையை வேறெங்காவது கூட்டிப் போய்த் தங்கு. இந்தப் பொம்பளை யாரு? எதுக்காக அவளுக்கு நீ இந்த வேலை பார்க்கணும்?''

அவன் தலை கவிழ்ந்தான்.

''பாவம் சார் அந்தம்மா. கணவன் சின்ன வயசிலேயே குடிக்கக் குடிக்கப் பண மெல்லாம் பாழ்பண்ணி, போதாதற்கு நகை நட்டையெல்லாம் தூக்கிட்டு வீட்டை விட்டே ஓடிட்டான். மளிகைக் கடை பாக்கி, வீட்டு வாடகை பாக்கின்னு ஏகப் பட்ட கடன். இந்தம்மா என்ன பண்ணும்? மூணுசின்னக் குழந்தைகளை வச்சு எப்படிக் காப்பாத்தும்? மளிகைக் கடைக்காரன் ஒரு வாரம் முழுக்க ராத்திரி வந்து மளிகை பாக்கியைத் தீர்த்துக்கிட்டான். வீட்டுக் காரன் ஒரு மாதம் தினசரி வந்து வீட்டு வாட கையை வசூல் பண்ணிட்டான். அவளுக்கு எது தேவையோ அதை இப்படியே அடையறது பழக்கமாயிருச்சு. அந்தம்மா உடம்பை வித்தால்தான் பிள்ளைகளுக்கு இரண்டு வேளைச் சோறு. மகன் பெரிய வனானப்புறம் எல்லாத்தையும் சரிசெய் வான் சார்... அதுவரைக்கும் இதுதான் கதி.''

சட்டென்று உள்ளே வந்து படுதாவைத் தாண்டி உள்ளறைக்குச் சென்ற கிருஷ்ணா திரும்பி வந்தான். நான் அவளிடம் முன்பு கொடுத்த இருபத்தைந்து ரூபாயை என் கையில் திணித்தான். ''உங்க காசு சார்... கம்மாவாணும் காசு வேணாம்... அவங்க அப்படியெல்லாம் இனாம் காசு வாங்க மாட்டாங்க.''

நான் பணம் வாங்க மறுத்தேன். ''இருக் கட்டும் அந்த அம்மாவிடமே கொடுத்துரு. ஒரு நாளாவது கேவலப்படாமல் மரியாதை யாய் இருந்ததற்குன்னு சொல்லு. அவள் பிள்ளைகளுக்கு வயிறு நிறைய ஏதாவது செய்து போடட்டும்.''

நான் சூட்கேஸைத் தூக்கிக் கொண்டு திரும்பிப் பாராமல் நடந்தேன்.

கிருஷ்ணா பின்னாலேயே ஓடி வந் தான். ''சார் சார் குடுங்க சார்... பெட்டியைத் தூக்கி வர்றேன்.''

''வேணாம்... நானே போய்க்கிறேன். அதெல்லாம் சரி... அந்தப் பெண்ணை அவ் வளவு தூரம் ஆதரிக்கப் போறியே... அவளுக்காக ஆண்களை வீட்டுக்குக் கூட்டி வர்றியே... அவளுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்?''

அவன் என்னுடைய முகத்தைப் பார்த் தவாறே நடந்தான். ''நம்ம தேசத்துல எல் லாரும் செய்யிற வேலையைத்தானே சார் நானும் செய்யறேன். அரசியல்வாதிங்க அவங்களுடைய நில்லுமுல்லுக்காக தேசத் தையே அப்படித்தானே சார் உபயோகிக் கறாங்க. நம்முடைய தாய்நாட்டையே விற் பனைக்காக மார்க்கெட்லதானே வச்சிருக் காங்க.''

''அந்தக் கதையெல்லாம் வேணாம்... நான் கேட்டதற்கு மட்டும் பதில் சொல்லு... அந்தம்மா உனக்கு என்னவாகணும்?''

கிருஷ்ணா நின்றான். என்னை ஏறெடுத் துப் பார்த்தான். கணப்போதில் அவன் கண்களில் நீர் நிறைந்து கன்னங்களில் இறங் கியது. பதில் கூற உதடுகள் துடித்தன. ஆனால் ஓசை வெளிவரவில்லை. தலை கவிழ்ந்தான். அதுவே பதிலாயிற்று.

தமிழாக்கம் : அமுதவன்

என்ன, ஜிக்கி
அவங்க திரும்பப்
பாடியிருக்காங்களா!

உண்மையா?
K.ஜமுனா ராணி
அவங்களும்
பாடியிருக்கிறார்களா!

ஒரிஜினலா அல்லது
டுப்ளிக்கேட்டாங்க –
எது நெசம் ?



பழைய, புதிய
தலைமுறையினரும் அலுக்காது
ரசிக்கும் பழைய பிரபல
சினிமாப் பாடல்கள் ... இன்றே
வாங்கி அவற்றைக் கேட்டு
"உண்மையாக"
அனுபவியுங்கள்!

HMV
அளிக்கும்

# உலவும் கீதம்

காசெட்

பழைய, புகழ்பெற்ற சினிமாப் பாடல்கள் 11 நிறைந்தது...
கம்ப்யூட்டர் மூலம் "ஒரிஜினல்" பாடல்
வடிவமைக்கப்பட்டது. (கம்ப்யூட்டர் வல்லுனர் :
T.செல்வகுமார்)

விலை : ரூ. 29/-
(TPHVS 32802)

எல்லா HMV ஆடியோ காசெட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும்.






# பாண்டியன்

## முன்கதை

முதற்குலோத்துங்கன் அரியணையேறிய காலம். சாளுக்கியப் போரைத் தொடர அவன் வடக்கே சென்று விட்டதாலும், சோழ இளவல் விக்கிரமனுக்கு உதவ சொற்ப காவற்படைகளே இருப்பதாலும் துணிவு பெற்ற மார்த்தாண்டன், கோட்டாற்றுப் பாண்டியன் மாறவர்மனை மதுரை அரியணையில் அமர்த்தவும் இழந்த பாண்டிய நாட்டை மீட்கவும் முதல் முயற்சியாக மேலை மங்கலத்தைத் தாக்கிக் கைப்பற்றுகிறான். மாறவர்மன் கடத்திச் சென்ற சோழ இளவரசி அம் மங்கையையும், மேலைமங்கலத்தையும் மீட்கும் அரையன் மதுராந்தகன், விக்கிரமனின் நட்பையும், அம்மங்கையின் காதலையும் பெறுகிறான். பின் பொதிகைக் கூற்றத்திலிருந்து ஜடாவர்ம பாண்டியன் மகள் கார்குழலியையும் மீட்டு சோழ நாட்டுக்கு அனுப்பி விட்டு, சமுத்திரபந்தன் என்ற பெயரில் சேரன் கடற்படைத் தளமான விழிஞத்தை அடைந்து, சேரன் தலைநகருக்கும் வருகிறான். அங்கு பாண்டியருக்கு உதவ முற்படும் சேரலாதனையும், ஈழத்துத் தண்டநாயகனையும் பாண்டியன் மகளைப் பற்றிக் கூறி, உதவியில் தயக்கமேற்பட வைக்கிறான். மதுரைக்கு வரும் கார்குழலியைக் கொல்ல ஈழத்திலிருந்து வந்த மார்க்கியன் பிடிபட்டுச் சிறை செல்கிறான்.

மதுரைக்கு மீண்டு வரும் சமுத்திரபந்தன், அரையன் மதுராந்தகனாக குலோத்துங்கனைச் சந்திக்க வடக்கே ஜெயந்தனுடன் வருகிறான். வழியில் நவிலைக் கோட்டையில் குலோத்துங்கனின் இரண்டாவது மகன் ராஜராஜன் சிறை வைக்கப்பட்டதையும், அங்கு சாளுக்கிய ஜெயதுங்கன் இருப்பதையும் அறிந்து, ஜெயந்தனோடு அங்கே செல்கிறான். சோழர் படைத்தலைவனுடன் வந்து வெள்ளி முளைக்கும் நேரத்தில் அந்தக் கோட்டையைத் தாக்குமாறு ஜெயந்தனிடம் செய்தி அனுப்பிய மதுராந்தகன், ஆயிரம் யானைகளைக் கொண்ட அந்தக் கோட்டையின் பயிற்சிக் களத்தில் நுழைந்து விடுகிறான். போரில் மறைந்து போன யானைப் படைத்தலைவனும் பெரும் வீரனுமான முனையூர்ச் செழியனின் மகன் மதுராந்தகன் என்பதை அறிந்து வியந்த ஜெயந்தன், சோழர் படைத்தலைவனை நாடிச் சென்று விவரங்களைத் தெரிவிக்கிறான். நவிலைக் கோட்டையில் ராஜராஜனைக் கொல்ல முயலும் ஜெயதுங்கனிடமிருந்து கடுமையான வாட்போருக்குப் பின் மீட்கும் மதுராந்தகன், ராஜராஜனின் அன்பையும் சோழர் படைத்தலைவன் காலிங்கராயனின் பாராட்டையும் பெறுகிறான். சோழர் படை நவிலையை வென்று ஆயிரம் போர் யானைகளையும் அடைகின்றனர். சோழர் பாசறையை மதுராந்தகன் அடையும் நேரம் சாளுக்கியப் போர் முடிவடைகிறது. மன்னனின் சபையிலும் இடம்பெறுகிறான் அரையன் மதுராந்தகன்.

விஷ்வக்சேனன்

## 22. யானை மேல் துஞ்சிய தேவர்

மாமன்னன் குலோத்துங்கனும், அவன் பெரும் படைத் தலைவர்களும் எத்தனையோ களங்களைக் கண்ட வீரர்களும் குழுமியிருந்த அந்தச் சபையில், கடாரத்தையும் ஸ்ரீவிஜயத்தையும் சோழ நாட்டுக்குக் கப்பம் செலுத்தும் சிற்றரசுகளாக ஆக்கியவனும், பிற்காலத்தில் கலிங்கத்தை வென்று, கலிங்கத்துப் பரணியென்னும் காவியம் எழக் காரணமாயிருந்தவனுமான கருணாகரத் தொண்டைமான் வீசிய கேள்விக் கணைகளுக்கு பதிலளித்துக் கொண்டே வந்த அரையன் மதுராந்தகன், நடுவே ஸ்ரீவல்லபர் எழுந்து உக்கிரமாக ''யார் அந்த சமுத்திரபந்தன்?'' என்று கேட்டதும் சற்று திகைத்தான்.

''அவன் யாரென்பதை விட அவன் செயல்களால் நமக்கு என்ன நன்மை என்று கேட்பது பொருந்தும்'' என்றான் சற்று அடக்கமாக.

''இளவரசர் பாதுகாப்பிலிருக்கும் பாண்டியன் மகளைப் பற்றி எதிரிகளுக்குத் தெரிவிப்பது நன்மை அளிக்கக் கூடியதா?'' - ஸ்ரீவல்லபரின் குரலில் உஷ்ணம் ஏறியிருந்தது.

''மாறவர்மனது அரசுரிமை பற்றிய சந்தேகத்தை ஏற்படுத்தி, மித்ரபேதம் செய்திருக்கிறான் சமுத்திரபந்தன். அதனால் சேரன் உதவி பாதியாகக் குறைந்திருக்கிறது. ஈழத்து உதவியும் இரண்டு கலங்களுடன் நிற்கிறது. மேலும் ஈழத்து இளவரசிக்கு மாறவர்மனைப் பிடிக்காததால், மண உறவும் முறிந்து விட்டது. இவை நன்மைகள் அல்லவா படைத் தலைவரே?''

# மகள்

மிருந்த அடக்கத்துடன், ஆனால் தெளிவாக விளக்கிய அரையனின் பதில், ஸ்ரீவல்லபரின் உஷ்ணத்தைத் தணித்து விட்டதால் அவர், ''இன்னும் வேறென்ன செய்திருக்கிறான் அந்த சமுத்திரபந்தன்?'' என்றார்.

''பாண்டியன் மகளைக் கொல்வதற்கு ஈழத்துத் தண்டநாயகன் அனுப்பி வைத்த மார்க்கியன் என்ற கொலையாளியைப் பற்றி அனைத்துத் தகவல்களையும் இளவரசருக்கு அனுப்பி, அவனைப் பிடிக்கவும் வழிசெய்திருக்கிறான். அந்தக் கொலையாளி நம்மிடம் சிக்கியதன் மூலம் ஈழத்தின் தலையீடு இருப்பதற்கு நல்ல அத்தாட்சி கிடைத்திருக்கிறது. எனவே ஈழ மன்னன் நமக்கு நேரிடையாகப் பதிலளிக்க வேண்டியவனாகிறான்'' என்றான் அரையன்.

''ஆகா ஆகா'' என்று சிலாகித்த ஸ்ரீவல்லபர், அரையன் முதுகில் உற்சாக அறை ஒன்றும் வைத்தார்.

''விழிஞத்தில் சேரன் கடற்படைத் தளம் ஒன்று அமைத்திருப்பதையும் கண்டறிந்து வந்திருக்கிறான் அவன்.'' - அரையன் முகம் வலியால் லேசாக கனித்திருந்தது.

மன்னனின் வலது கரம் உயர்ந்தது. அவையில் நிசப்தம் நிலவியது. ''இனி நம் படையெடுப்பைப் பற்றிப் பேசலாம்'' என்றான் குலோத்துங்கன்.

காலிங்கராயன் சீலையொன்றை எடுத்துக் கூடாரத்தின் பக்கத் துணியொன்றில் அனைவரது பார்வையிலும் படும்படி பொருத்தினான்.

சோழர் படை தற்போது இருக்கும் துங்கபத்திரா நதியின் கரையும் பிடிபட்ட சாளுக்கியர் கோட்டைகளும், வேங்கி நாடும், கங்கபாடியின் எல்லையும் சோழ நாட்டுப் பாதைகளும் தெளிவாக வரையப்பட்டிருந்த அந்தச் சீலையை அவையிலிருந்தவர்கள் வைத்த கண் வாங்காது பார்த்தனர்.

காலிங்கராயன் குரல் ஒலித்தது. ''படைத் தலைவர்களே, ஜெயதுங்கனிடமிருந்து இளவலை மீட்டதோடு, அவனிடமிருந்து



ஆயிரம் யானைகளையும் கைப்பற்றி, நமது படைக்கு அளித்த அரையன் மதுராந்தகன், ஒரு திட்டம் வகுத்திருக்கிறான். இளையவர்களுக்கு முதல் வாய்ப்பை அளிக்கும் நமது அவையின் சம்பிரதாயப்படி, அவன் தன் திட்டத்தைக் கூறுமாறு உத்தரவிடுகிறேன்'' என்றான் படைத்தலைவன்.

அரையனை சிலாகித்துச் சிலரும் அவன் அனுபவமின்மை குறித்துச் சிலரும் பேசத் தொடங்கவே, அவையில் குழப்பமான குரல்கள் ஒலிக்கத் தொடங்கின.

படைத் தலைவர்களின் உணர்ச்சிகளையும் அரையனை ஆதரித்துப் பெரும்பாலான குரல்கள் தர்க்கித்ததையும் கவனித்த மன்னன், தன் கரத்தை மீண்டும் உயர்த்தினான். அவை நிசப்தமானது. அனைவரது பார்வையும் மெல்ல அரையன் மீது பதிந்தன.

''மதுராந்தகா, நீ உன் திட்டத்தைக் கூறலாம்.''

மன்னன் உத்தரவிட்டான்.

தனக்களிக்கப்படும் அந்த வாய்ப்பு நன்றாகப் பயன்படுத்திக் கொள்ளப்படுமாயின், தன் திட்டம் ஏற்கப்பட்டு, அது வெற்றியும் கொடுக்குமாயின் அது தனக்குப் புகழையும் பெருமையும் தருவதோடு, எதிர்காலத்தில் சோழர் படையில் ஒரு பதவியையும் பெற்றுத் தரும் என்பதை அரையன் மதுராந்தகன் நன்றாகப் புரிந்து கொண்டிருந்தான். மன்னன் உத்தரவுக்கு எழுந்து வணங்கிய அவன், ஒருமுறை அந்த அவையைப் பார்வையால் அளந்தான். ஒவ்வொரு போரிலும் சாதனைகள் புரிந்து, பெரும் வீரத்தைக் காட்டி, பெருமையும் புகழும் பெற்றிருந்த அந்தத் தலைவர்கள் தன்னை வைத்த கண் வாங்காமல் நோக்குவதையும் தனது திட்டத்தைக் கேட்கத் தயாராக அமர்ந்திருப்பதையும் கண்ட அரையன் சற்று தயங்கவே செய்தான்.

அவன் பார்வை பாய்ந்த இடங்களையும் அதில் லேசாகப் படர்ந்த தயக்கத்தையும் கவனித்த மன்னன் -

''மதுராந்தகா, தயங்க வேண்டாம். போரில் தயக்கம், தாக்குபவருக்குப் பலவீனம் என்பதைப் பட்டர் உனக்குப் போதிக்கவில்லையா? உன் திட்டத்திற்கு நீ தரும் விளக்கங்களைப் பொறுத்தே அது ஏற்கப்படுவது முடிவு செய்யப்படும். உன் சேவைகளையும் அறிவையும் பரிசீலித்த பின்னரே உன்னை இந்த அவையில் அனுமதித்திருக்கிறோம். அது மட்டுமல்ல...'' என்று சற்று நிறுத்திய மன்னன், ''தனிப்பட்ட முறையிலும் நீ இந்த அவைக்குத் தகுந்தவன் என்பதை நான் அறிவேன். அது பற்றிப் பிறகு பேசலாம். இப்போது நீ உன் திட்டத்தைக் கூறலாம்'' என்று முடித்தான்.

மன்னன் இறுதியாகக் கூறிய வார்த்தைகள் அரையனைச் சற்று குழப்பவே செய்தாலும் தயக்கத்தைக் கைவிட்டவனாகத் தன் குரு கவிநாராயணபட்டரை மனத்தால் வணங்கி விட்டுப் பேச ஆரம்பித்தான். பேசு முன் அந்தச் சீலையை நெருங்கியவன் தன் குறுவாளை எடுத்துத் துங்கபத்திரையின் கரையில் பதித்தான்.

''நாம் இங்கிருக்கிறோம். நமது பெரும் படையைக் கோட்டாற்றங்கரை வரை நடத்திச் செல்லச் சில காலம் ஆகும். வழியில் உணவுக்கு மக்களை நாம் சிரமப்படுத்த வேண்டியிருக்கும். புதிதாக நமது யானைப் படையும் அதிகரித்திருக்கிறது. பெரும் படையை நீண்ட தூரம் நடத்திச் செல்வதில் உள்ள சிரமங்கள் நீங்கள் அறியாததல்ல. மேலும் பெரும்படை வருவதை பாண்டியன் அறிவது, அவன் எச்சரிக்கையுடன் விரைந்து செயல்படவும் வழிவகுக்கும்.''

அரையன் கூறுவதில் உள்ள உண்மை படைத்தலைவர்களுக்கு தெளிவாகப் புரிந்தது.

அவன் தொடர்ந்தான் : ''பாண்டியரிடையே மித்ரபேதம் செய்ய சமுத்திரபந்தன் ஒரு வதந்தியையும் அவர்களிடையே உலவ விட்டிருக்கிறான்.''

''என்ன வதந்தி?''

''இங்கு நடக்கும் போர் தற்போது முடியாது என்றும் போரில் நமது படைகள் மிகவும் சேதப்பட்டதால், சோழ நாட்டில் உள்ள சொற்ப காவல் படைகளும் இங்கு வரச் சித்தமாக இருப்பதாகவும் வதந்தி நிலவுகிறது பாண்டியரிடையே!''

அவை சற்று திகைத்தது. நரசிம்மராயன் கேட்டான் : ''இதனால் என்ன லாபம்?''

''மாறவர்மனின் படை திரட்டும் முயற்சி மந்தகதியில் நடக்க இது வழிவகுத்திருக்கிறது. உத்தமபாளையத்துப் படையும்

## அருள்வாக்கு

பக்தியில் பூனைக் குட்டி முறை ஒன்று. அதாவது பக்தர்களில் ஒரு வகையினர், இந்தப் பூனைக்குட்டி தன் முயற்சியின்றி, தாய்விட்ட வழி என்றிருப்பது போலவே பகவானைச் சரணடைந்து இருப்பர். அவரைப் பணிவுடன் வேண்டி அவரைத் துதித்துப் புகழ் பாடி அவருடைய அருளை வேண்டுவார்கள். அவருடைய பொற்பாத கமலங்களில் தங்களது உள்ளத்தைக் கிடத்துமாறு செய்து, தம்மை ஆட்கொள்வது பகவானது பொறுப்பே என்று கருதி, பூனைக்குட்டி சுய முயற்சியின்றித் தாயை நம்பி இருப்பது போல் இருப்பார்கள். இவ்வித பக்திக்கு மார்ஜார கிசோர நியாயம் என்று பெயர்.

பூனைக்குட்டிக்கு நேர் மாறு குரங்குக் குட்டி. இந்தக் குரங்குக் குட்டி போன்றவர் இன்னொரு வகை பக்தர்கள். குரங்கின் குட்டியானது அதன் தாயின் வயிற்றைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கும். அதன் தாய் மரத்துக்கு மரம் தாவும் போது தன் குட்டியைப்



பற்றி யாதொரு கவலையும் கொள்ளாது, குட்டிதான் தன்னைக் காத்துக் கொள்ளத் தாயின் வயிற்றை மிகவும் இறுக்கமாகப் பிடித்துக் கொள்ள வேண்டும். அது எதையும் பலத்துடன் பற்றிக் கொள்ளும். குரங்குப்பிடி என்றே சொல்வதுண்டே!

இப்படிப்பட்ட குரங்கின் ரீதியிலேயே, மர்க்கட கிசோர நியாயமாக, சில பக்தர்கள் இருக்கிறார்கள். அவர்கள் பகவானை இறுக்கமாகப் பிடித்துக் கொள்வார்கள். பகவானே அருள் செய்யட்டும் என்று காத்திராமல், அவன் உதறித் தள்ளினாலும் விடுவதில்லை என்று அவனைப் பிடித்துக் கொள்வார்கள். 'சிக்கெனப் பிடித்தேன்' என்று மாணிக்கவாசகர் பாடியுள்ளார். அவரே சிவபுராணத்தில் 'பக்தி வலையில் படுவோன்' என்று கூறுகிறார். அப்படியானால், பக்தர்கள் பகவானைச் சிக்கென்று பிடிக்கிறார்களா, பகவான் பக்தரிடம் சிக்கிக் கொள்கிறாரா என்ற கேள்வி வருகிறது. பக்தன் சிக்கென்று பிடித்து விட்டால், அப்புறம் பகவானே அவனிடம் சிக்கிக் கொண்டு விடுகிறார். பக்தர்கள் கையிலிருந்து பகவான் தப்ப முடியாமல் வலையில் விழுந்த மீன் போலச் சிக்கி விடுகிறார்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

கொங்கு மன்னனது படையும் கோட்டாற்றுப் படையுடன் இணைவதும் தாமதப்பட்டுவிடும். மாறவர்மனது அரசுரிமையில் ஆரம்பித்துள்ள குழப்பம் எல்லோரது கவனத்தையும் கவர அவகாசம் கிடைக்கும்.''

அவையில் அடங்கிய குரலில் சமுத்திர பந்தனைப் பற்றிய விவாதம் ஆங்காங்கே தொடங்கியது. தொண்டையைக் கனைத்துக் கொண்ட அரையன் மீண்டும் தொடர்ந்தான் :

''நாமிருக்குமிடத்திலிருந்து நதியின் முகத்துவாரத்தை மூன்று தினங்களில் அடையலாம். தற்போதுள்ள உணவுப் பொருட்களுடன் பாதிப்படை கலங்களில் ஏறலாம். மீதிப் பாதியை மூன்றாகப் பிரித்து, ஒன்று நேர் தெற்கில் மதுரை நோக்கிச் செல்லலாம். மற்றொன்று வேங்கியின் வழியாகத் தெற்கே போகலாம். மற்றொன்று கங்கபாடியின் எல்லையோரமாக உத்தமபாளைய பாண்டியனைச் சந்தித்த பின், பொதிகைச் சாரலை அடையலாம்.''

அவை நிசப்தமாயிருந்தது. சற்று இடைவெளி கொடுத்த அரையன், மீண்டும் தொடர்ந்தான் :

''இப்படி சிறு பிரிவுகளாகச் செல்வது துரிதமான பயணத்திற்கு உதவுவதுடன், வழியில் நமது படைகளுக்கு உணவளிப்பதும் எளிதாகும். கலங்களில் புறப்படும் வீரர்கள் கொற்கையிலுள்ள பாண்டியரைச் சந்திக்கலாம். பின் குமரியில் வீரர்களையும் இறக்கலாம். பின்னர் கலங்கள் விழிஞத்தை நோக்கி வர வேண்டும். கங்கபாடியின் வழியாகச் செல்லும் படைப்பிரிவு உத்தமபாளையத்தை வென்றபின், பொதிகைச் சாரலினூடே மலைக்கணவாயிலுள்ள சேரன் படைப் பிரிவைச் சந்திக்கலாம். பின் நேராக விழிஞத்தை அடையலாம். நமது கடற்படையாலும் தரைப்படையினாலும் விழிஞமும், காந்தளூர்ச் சாலையும் ஒரே சமயத்தில் தாக்கப்படும். இதில் நமது கடற்படைத் தலைவரின் பொறுப்பு சற்று அதிகமாகவே இருக்கிறது.''

கடற்படைத் தலைவனது கூரிய விழிகளில் மகிழ்ச்சி நிலவியது. அவனது பெரு மீசையும் ஒரு பக்கமாக இழுபட்டு அவன் முறுவலிப்பதை உணர்த்தியது. நடைமுறையில் திட்டத்தில் எழுந்த சிறு சந்தேகங்களுக்கும் தெளிவாக விளக்கங்கள் கூறினான் அரையன். திட்டம் பூரணமாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

அவை கலைய உத்தரவிட்ட மன்னன், முக்கியமானவர்களை மட்டும் நிறுத்தி, மற்ற படைத் தலைவர்கள் வெளியேற அனுமதித்தான்.

இருக்கையை விட்டு எழுந்து வந்த காலிங்கராயன் அரையனது தோளில் கை வைத்தபடி மற்ற படைத் தலைவர்களையும், குறிப்பாக ஸ்ரீவல்லபரையும் நோக்கி, ''ஸ்ரீவல்லபரே, நீங்கள் சமுத்திரபந்தனைப் பற்றிக் கேட்டீர்களல்லவா?'' என்று வினவினான்.

''ஆம் கேட்டேன்'' - ஸ்ரீவல்லபரின் வெண்கலக் குரலில் சற்று வியப்பு இருந்தது.

அரையனை நிறுத்திய படைத்தலைவன், ''இதோ உங்கள் முன்னால் நிற்கும் இந்த அரையன் மதுராந்தகன்தான் சமுத்திர பந்தன் என்ற பெயருடன் சென்று பாண்டிய

ரிடையே குழப்பத்தை ஏற்படுத்தியவன். இவன் திட்டத்தினால்தான் மேலைமங்கலம் ஒரே நாளில் மீட்கப்பட்டது'' என்று அறிவித்தான்.

ஸ்ரீவல்லபரின் பெருவிழிகள் இன்னும் விரிந்தன. ''இதை அவையிலேயே அறிவித்திருக்கலாமே?'' என்றார் அவர்.

''சமுத்திரபந்தன் மீண்டும் சேரநாட்டிற்குச் சில பூர்வாங்கப் பணிகள் நிமித்தம் செல்ல வேண்டியிருப்பதால் அது அறிவிக்கப்படவில்லை'' என்றான் படைத்தலைவன்.

''ஆகா ஆகா'' என்று கையை உயர்த்திய ஸ்ரீவல்லபர், அருகில் நிற்பது கடற்படைத் தலைவன் கருணாகர பல்லவனும் அவன் உபதலைவனும் என்பதால் கையைத் தாழ்த்திக் கொண்டு, அரையனை நெருங்கி, அவன் விலா எலும்பு முறிவது போல் ஓர் ஆனந்த அணைப்பு அணைத்துக் கொண்டார்.

விடுபட்ட அரையனின் விழிகள் மன்னனை ஏறெடுத்து நோக்கின. அதில் ஏதோ கேள்வியொன்று புலப்படவே மன்னன் வினவினான் :

''மதுராந்தகா, நீ ஏதோ கேட்க விரும்புவதாகத் தெரிகிறது?''

''ஆம் மன்னவா. என்னைத் தனிப்பட்ட வகையிலும் இந்த அவைக்குத் தகுந்தவன் என்று கூறினீர்கள்...''

பதில் கூற முற்பட்ட மன்னன் முகத்தில் கனவுச் சாயை படர்ந்தது. அவன் பார்வை தொலைதூரத்தில் எங்கோ சென்று பதிந்தது. கனவுலகத்திலிருந்து ஒலித்தது அவன் குரல் :

''மதுராந்தகா, என் அம்மான் விஜய ராஜேந்திர தேவரை அறிவாயா நீ?''

மன்னன் முகத்தில் விரிந்த கனவுப் பார்வை காலிங்கராயன் முகத்திலும் படர்ந்திருந்தது. காரணம் புரியாத அரையன், அவர் மெய்க்கீர்த்தியை ஏதோ வேத அத்யயனம் செய்பவன் போல மெல்ல உச்சரித்தான் :

''கல்யாணபுரமும் கொல்லாபுரமும் கொண்டருளி யானை மேல் துஞ்சிய தேவர்.''

''ஆம். யானை மேல் துஞ்சிய தேவர் தான்'' என்ற மன்னன் தொடர்ந்தான் : ''கல்யாணபுரத்துப் போரில் சாளுக்கிய ஆகவமல்லனை வென்ற போது, என் அம்மானுடன் யானைப் படையை நடத்திச் சென்றார் உன் தந்தை முழையூர்ச் செழியன். வேங்கியில் இளவரசனாக இருந்த நானும் போரில் கலந்து கொண்டேன். எதிர்த்த சாளுக்கியப் படையை துவம்சம் செய்தார் உன் தந்தை. ஆனால் போர் முடியும் தறுவாயில் ஆகவமல்லன் செய்த சதி, செயல்பட்டது. அதை முறியடிக்கத் தம் உயிரையே தந்தார் உன் தந்தை. ஆயினும் அவரால் விஜயராஜேந்திரரைக் காக்க இயலவில்லை. அவர் ''யானை மேல் துஞ்சிய தேவர்'' ஆனார். நீ அப்போது முழையூரில் சிறுவனாக உன் தந்தையின் உதவியாளனுடன் யானைகளைப் பழக்குவதில் ஈடுபட்டு, இரவும் பகலும் யானைக் கொட்டடியில் காலங் கழிப்பதாக அறிந்தேன். உன்னை நாராயண பட்டரிடம் ஒப்படைத்துக் கல்வியும், போர்ப் பயிற்சியும் அளிக்கக் கேட்டுக் கொண்டேன். அவர் எனது வேண்டுகோளை மிகச் சரியாக நிறைவேற்றியிருக்கிறார்'' என்று முடித்தான் மன்னன்.

ஒவ்வொரு வீரனது குடும்பத்திலும் அக்கறை எடுத்துச் செயல்படும் அந்த மாமன்னனை வணங்கி, மெல்ல விடை பெற்று, படைத்தலைவனுடன் வெளியே வந்தான் அரையன்.

**ப**டைத்தலைவன் படைகளைப் பிரித்த நேர்த்தியையும், காவலுக்கும், நிர்வாகத்திற்கும் உபதலைவர்களை நியமித்ததையும் கண்ட அரையன் தான் கற்க வேண்டியது இன்னும் எவ்வளவோ இருக்கிறது என்பதையும் உணர்ந்து கொண்டான்.

பாதிப் படையை கடற்படைத் தலைவனுடன் அனுப்பியவன், மீதியை மூன்றாகப் பிரித்துத் தலைவர்களையும் நியமித்தான். அரையனைத் தன்னுடன் அழைத்துக் கொண்டவன், கங்கபாடியின் எல்லை வழியே செல்ல வேண்டிய பிரிவைத் தானே நடத்திச் செல்லத் தீர்மானித்தான்.

படைகள் அணிவகுக்கத் தொடங்கிய தருணத்தில் எங்கிருந்தோ வந்து தோன்றிய ஜெயந்தனைக் கண்ட அரையனது முகத்தில் வியப்பு பரவியது.

படைத்தலைவனையும் அரையனையும் வணங்கிய ஜெயந்தன், ''கல்யாணபுரத்திற்குச் சென்று வந்தேன் பிரபு'' என்றான்.

''என்ன? விக்கிரமாதித்தன் தலைநகருக்கா?'' - அரையனது குரலில் வியப்பு வழிந்தது.

''ஆம் பிரபு. இன்னும் குறைந்தது ஐந்து ஆண்டுகளுக்கு அவன் போரைப் பற்றிச் சிந்திக்க மாட்டான். அதைவிட முக்கிய செய்தி இருக்கிறது பிரபு!''

''என்ன அது?''

''காஞ்சியிலிருந்து மார்க்கியன் தப்பி விட்டான்!''

''என்ன? உண்மையாகவா?'' - அரையனால் நம்ப இயலவில்லை.

''உண்மைதான் பிரபு. விசாரணைக்காக அமைச்சரிடம் அழைத்து வரப்பட்டவன் வழியில் வணிகர்கள் உதவியுடன் தப்பியிருக்கிறான்.''

''மாறவர்மன் இப்போது எங்கிருக்கிறான்?'' - படைத்தலைவன் கேட்டான்.

ஜெயந்தன் கூறிய பதில் அவர்களைத் திகைக்க வைத்தது.

''மாறவர்மன் இப்போது ஈழத்திலிருக்கிறான்'' என்றான் ஜெயந்தன்.

(தொடரும்)



# காலை காப்பிக்குக் கர்நாடகத்துக்கு நன்றி!

**கா**லையில் எழுந்தவுடன் காப்பி குடித்தே ஆக வேண்டுமென்பது நமக்கெல்லாம் எழுதப்படாத சட்டம். ஆனால் காப்பி சட்டம் என்றே ஒன்று இருப்பது எத்தனை பேருக்குத் தெரியும்? இந்தியாவில் உற்பத்தியாகிற காப்பி முழுவதையும், காப்பி போர்டுக்குத்தான் விற்க வேண்டும் என்கிறது இந்தச் சட்டம். இப்படி பெறப்பட்டதை ஏலம் விடுவதுடன் விலை நிர்ணயமும் செய்கிறது காப்பி போர்டு.

புதிய பொருளாதாரக் கொள்கை காரணமாக, காப்பி சட்டத்தில் ஒரு திருத்தம். காப்பி உற்பத்தியாளர்கள், உற்பத்தியில் முப்பது சதவீதத்தைத் தாமே நேரடியாக, விற்பனைக்கு அனுப்பலாம். ஆனால் இந்த 30 சதவீதமும் உள்நாட்டு விற்பனைக்கு மட்டுமே! இந்தச் சட்டத் திருத்தத்தின் விளைவாக, மார்க்கெட்டில் அறிமுகமாகியிருப்பது கூர்க் காப்பி. இந்த காப்பியின் தனிச் சிறப்பு நூற்றுக்கு நூறு சுத்தமான ஃபில்டர் காப்பி என்பதே. அதாவது ஒரு சிட்டிகை கூட சிக்கரி கலக்கப்படாத காப்பி.

அது என்ன சிக்கரி? அது, ஒரு செடியின் வேர். ஜெர்மனியில் இரண்டாம் உலகப் போரின் போது, அறிமுகமானது. பற்றாக்குறையைச் சமாளிக்க, அக்கால கட்டத்தில் காப்பியுடன் கலந்து பயன்படுத்தப்பட்டது. இன்று காப்பி உற்பத்தி பல மடங்கு பெருகி விட்டபோதிலும் சிக்கரி கலப்படம் நம்மை விட்டுப் போகவேயில்லை! பலருக்கு அது கலக்கப்பட்டால்தான் காப்பியே ருசிக்கிறது.

**மா**நிலத்துக்கு மாநிலம் காப்பி - சிக்கரி கலப்பு சதவீதம் வேறுபடுகிறது. இதனால் காப்பியின் மணமும், சுவையும் மாறுபடுகிறது.

''தென்னிந்தியாவிலேயே, தமிழ்நாட்டு மக்களுக்குத்தான், மற்ற மாநிலங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, சுத்தமான காப்பி பருக வேண்டும் என்கிற எண்ணம் இருக்கிறது. எனவேதான், நாங்கள், நூறு சதவீதம் சுத்தமான கூர்க் காப்பியை அறிமுகப்படுத்துவதற்கு முதலில் தமிழ்நாட்டைத் தேர்ந்தெடுத்தோம்!'' என்கிறார் கூர்க் காப்பி உற்பத்தி செய்யும் கன்சாலிடேட்டட் காப்பி நிறுவனத்தின் மானேஜிங் டைரக்டர் போபண்ணா.

இந்தியாவின் மொத்த காப்பி உற்பத்தியில் 55 சதவிகிதம் கர்நாடகாவில்தான் விளைகிறது. அதனால்தான் கன்ஸாலிடேட்டட் நிறுவனம் அங்கு அதிகமாக காப்பி விளையும் பிரதேசத்தை நினைவூட்டும் வகையில் கூர்க் காப்பி என்ற பெயரைத் தேர்ந்தெடுத்துள்ளது.

இவர்களின் அடுத்த குறிக்கோள் என்ன தெரியுமா? சாயாவுக்கே பழகிப் போன வட இந்தியாவில் காப்பியைப் பிரபலப்படுத்தும் பணியில் முழு முயற்சியுடன் இறங்குவது! பிறகென்ன? ஒருமைப்பாடு ஓங்க உதவும் ஐட்டங்களில் ஒன்றாக நமது அரசியல்வாதிகள் காப்பியையும் சேர்த்துக் கொள்ள வேண்டியதுதானே!

– எஸ். சந்திரமௌலி



✱ போபண்ணா

✱ காப்பித் தோட்டத்தில்...

# பட்டாளத்தார் வருகிறார்

வரவிருக்கும் ஜூன் முதல் வாரத்தை மிக மிக ஆவலோடு எதிர் நோக்கிக் கொண்டிருந்தார் இராமபத்திரன்.

ராணுவத்தில் மேஜராக இருக்கும் அவரது சித்தப்பா பிள்ளை மேஜர் செல்லதுரை, மே மாதம் பணியிலிருந்து ஓய்வு பெறப் போகிறார். அதற்கப்புறம் கிராமத்திற்கு வந்து நில புலங்களைப் பார்த்துக் கொண்டு அங்கேயே நிரந்தரமாகத் தங்கப் போகிறார். கடைசிக் காலத்திலாவது பிறந்த மண்ணில் தங்கி நிம்மதி காணலாம் என்ற திட்டம் அவருக்குக் கடந்த சில மாதங்களாகவே இருந்தது.



இராமபத்திரனுக்குத் தன்னுடைய சொந்த விவசாயத்தோடு தம்பியின் தோட்டம் துரவுகளையும் கட்டி இழுக்கின்ற சுமை குறையப் போகிறது. அது மட்டுமல்ல; செல்லதுரையின் வரவால் அந்தக் கிராமமும் எத்தனையோ முன்னேற்றங்களைக் கண்டு சீர் திருத்தம் பெறப் போகிறது என்ற மாபெரும் எதிர்பார்ப்புத்தான் அவருக்கு அளவுக்கடங்காத ஆனந்தத்தைத் தந்து கொண்டிருக்கிறது.

“யாரு, பெரிய தம்பி இருக்குதா?” என்ற கேள்வியோடு வாசலில் வந்து நின்றார் காரை வீட்டுப் பெரியவர் காளிச்சாமி.

“உள்ளே வாங்க பெரியப்பா! என்ன விஷயம்? இப்படித் தட்டுத்தடுமாறிட்டு வராட்டி என்ன? சொல்லியனுப்பிச்சா நானே வர மாட்டேனா?” - என்று ஆதங்கத்துடன் உபசரித்தபடியே பெரியவருக்குக் கை கொடுத்து உள்ளே அழைத்துச் சென்று கூடத்து ஊஞ்சலில் உட்கார வைத்தார் இராமபத்திரன்.

“என்ன சங்கதி பெரியப்பா?”

“போன வாரந்தான் வாழத் தோப்புல மூணுநூறை முழுசா வெட்டிட்டுப் போயிட்டாங்க'ன்னு ஒங்கிட்டே சொன்னேனில்ல? நேத்து ராத்திரி பாரு, எங்க தென்னந் தோப்புலே கொறஞ்சது இருநூறு காய்களாச்சும் இருக்கும்! வல்ஓரசா குளோஸ் பண்ணிட்டுப் போயிருக்காங்க. ஊருல காவல் கட்டல்லாம் என்னாச்சு? ஏம்பா ஒங்க தாத்தா அப்பாவுங்க பெரியதனம் பண்றப்போவெல்லாம் இந்த ஊருல ஒரு தூசு துரும்பாவது ஆடியிருக்குமா, அசங்கியிருக்குமா?”

“நீங்களுந்தானே பார்த்துட்டிருக்கீங்க பெரியப்பா. கெட்டிக்காரனா பாத்துத்தான் கிராமக் காவல் போட்டிருக்கோம். அவனும் ராப்பகலா பேயாத்தான் அலையறான் என்ன பிரயோஜனம்? முந்தாநாளு கெழக்கூருக் காரங்க ஆடுகள ஓட்டியாந்து அப்பராணி ஆறுமுகத்தோட வயக்காட்டுலே மேய விட்டிருக்காங்க! எல்லாம் நம்ம பக்கத்து ஊரு சுப்புவோட ஆளுங்கதான்! நம்மூரு காரங்களை அடிச்சுத் தள்ளிட்டு, ஆடுகளைப் பத்திட்டு ஓடிட்டாங்க. போலீசுலே புகார் கொடுத்திருக்கு; அவங்களக் கூப்பிட்டு இன்னும் வெசாரிச்சதாத் தெரியலே!”

“என்ன மோசம்பா! இப்படியே போய்க்கிட்டிருந்தா அப்புறம் பொண்ணு பொடுசுக பகல்ல கூட வெளியே நடமாட முடியாம போயிடும்....”

“இன்னும் ரெண்டே மாசந்தான் பெரியப்பா. அதுக்கப்புறம் இதுக்கெல்லாம் ஒரு நல்ல விடிவு காலம் பொறந்துடும் பாருங்க!”

“நீ என்ன சொல்ல வாரே தம்பி?”

“நம்ம மேஜர் செல்லதுரை தம்பி அடுத்த மாசம் ரிட்டயராகி இங்க வந்து பூர்வீக வீட்டில் குடியேறப் போறாரு. அவர் மட்டும் இங்க வந்து

ஒக்காரட்டும், கப்புவோட ஆளுங்க இந்தப் பக்கமே தலை வைக்கப் படுக்க மாட்டாங்க...! பட்டாளத் துக் காரருன்வா சும்மாவா!''



**சா**ப்பாட்டை முடித் துக் கொண்டு அவர் ஊஞ் சலில் வந்து அமர்வதற்கும் பழைய பஞ்சாயத்து பிரசி டெண்ட் பவள முத்து அவ ரைத் தேடிக் கொண்டு வரு வதற்கும் சரியாக இருந் தது.

''வா முத்து, என்வ இந்த வெயில்லே?....''

''எல்லாம் குடி தண் ணிப் பிரச்னை தான். மேக் காலே ஊருக்காரங்க மெயின் கொழாயோட கேட்வால்வை இறுக்கி மூடிப் பூட்டப் போட்டுட் டாங்க. நம்ம ஊருக்குத் தண்ணியே வரலே.''

''பொடிப் பசங்க தலையெடுத்து ஆடு றாங்க!''

''நாஞ் சொல்ல வர்றது அண்ணாச்சி, நமக்குன்னு தனிக் கெணறு அமையுற வரைக்கும் இந்தக் கதை ஓயவே ஓயப் போறதில்லே. நம்ம சம்பங்கித் தோப்புக் கெணத்துலே ஏ கிளாஸ் தண்ணி கெடக்கு. ராப்பகலும் ஒட்டுனாலும் அரைக் கெணத்தை அசைக்க முடியாது. நாம போன வருஷம் திட்டம் போட்டது மாதிரி அங்கவேயே ஓவர் டேங்க் கட்டிக் கொழாய் களப் பதிச்சிட்டா, எந்தப் பயல்களையும் போய்க் கெஞ்ச வேணாம். இது விஷயமா நாமளுந்தான் கலெக்டர், கவர் னர், மந்தி ரின்னு பெட்டிசனுக்கு மேலே பெட்டிசனப் போட்டு அலஞ்சி அலுத்துப் போயிட் டோம்...''

''எல்லாத்துக்கும் வழி பொறக்காம போகாது முத்து. இன்னும் ரெண்டு மாசந் தான். நம்ம மேஜர் செல்லதுரை வர்ற ஜுன் மாசத்துலேருந்து இங்க வந்துதானே குடி யிருக்கப் போறாரு? பட்டாளத்துக்காரர் அவரு வந்து காரியத்துலே எறங்கிட்டா, எல்லாமும் 'மளமள'ன்னு நடக்கும் பாரு.''

**ஊ**ஞ்சலில் துண்டை விரித்துச் சாய்ந்த இராமபத்திரனின் சிந்தனையில் ஊர்ப் பிரச்னைகள் ஒவ்வொன்றாகத் தலை தூக்கி விசுவரூபம் எடுக்கத் தொடங்கின. இந்த அவலங்களைத் துடைக்க ஓர் அவதார புருஷர் வந்துதான் ஆக வேண்டும்!

இப்போது இராமபத்திரனின் மன வானில் ஒளிக் கீற்றுகளை விரித்து உதய பானுவாகப் பிரகாசித்தது தம்பி செல்ல துரையின் உருவம்தான்.

'ஆனை படுத்தாலும் குதிரை மட்டம் தானே? 'ரிட்டயர்' ஆகி வந்தாலும் அவரது அபரிமிதமான செல்வாக்குக்கு முன்னால் அண்டை அடுத்த ஊர்க்காரர்கள் நிச்சயம் ஆட்டம் அடங்கி அமுங்கிப் போகத்தான் போகிறார்கள்.

"**அ**ப்பா, லெட்டர் வந்திருக்கு.''

மகளின் அறிவிப்பைக் கேட்டுத் துள்ளி எழுந்து உட்கார்ந்தார். மூக்குக் கண்ணாடி யைக் கொண்டு வரச் சொல்லி ஆவலோடு படித்தார்.. மேஜர் செல்லதுரையின் கடிதம் தான்....

வழக்கமான க்ஷேம லாப விசாரணைக் குப் பின்னால்..... ஏமாற்றம் படர்ந்த அவரது விழிகள் மறுபடியும் அந்தச் செய்தி யில் பதிந்தன.

'... ... ... நான் ஓய்வு பெற்றதும் கிரா மத்தில் வந்து செட்டில் ஆவதாக ஏற் கெனவே எடுத்த அந்த முடிவை இப்போது மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் நேர்ந்து விட்டது. நானும் என் போல ரிட் டயர் ஆகப்போகும் இரண்டு நண்பர்களும் சேர்ந்து 'செக்யூரிட்டி ஏஜன்சி' ஒன்றை இந்தப் பட்டணத்தில் தொடங்குவதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. ஆதலால் எங்களுக்காக வீட்டைக் காலி செய்து விட வேண்டாம்! தொடர்ந்து வாட கைக்கே இருக்கட்டும். நில புலங்களை யும்....'

இராமபத்திரனின் மனப்பரப்பில் கோபுரமாய் உயர்ந்தோங்கி நின்ற எதிர் பார்ப்புகள் இப்போது இடிந்து நொறுங்கிச் சிதிலங்களாகக் குவிந்தன!

**குரு சீனிவாசன்**

# சக்கரவர்த்தித் திருமகன்

## 41. பரதன் திரும்பினான்.

**நா**ன்கு அரச குமாரர்களும் மூன்று பட்டமகிஷிகளும் ஓர் இடத்தில் மறுபடியும் கூடிவிட்டார்கள் என்ற செய்தி அறிந்த உடனே தூரத்தில் மரியாதைக்காக நின்று கொண்டிருந்த படைவீரரும், ஜனங்களும் உடனே அந்தச் சந்தோஷக் காட்சியைப் பார்க்க ஓடி வந்து விட்டார்கள். ஒரே மகிழ்ச்சி ஆரவாரம்.இனி ராமன் அயோத்தியைக்குத் திரும்பி விடுவான் என்றே நிச்சயித்துக் கொண்டு குதூகலப்பட்டார்கள். ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்து கொண்டு மங்களம் கொண்டாடினார்கள்.

மகாராஜாவும் தந்தையுமான தசரதன் இவ்வுலகம் துறந்து விட்டானே என்று சீதையும் ராம-லக்ஷ்மணர்களும் துக்கக் கடலில் மூழ்கியிருந்தார்கள். ஆனால் ஜனக்கூட்டத்தில் ராம தெரிசனத்தினால் பெருத்த மகிழ்ச்சி பொங்கிற்று.

**வ**சிஷ்ட முனிவர் தேவிமார்களைப் பர்ணசாலைக்கு அழைத்துச் சென்றார். வழியில் மந்தாகினி நதியைப் பார்த்தார்கள். இந்தத் துறையில் இறங்கித்தான் ராஜகுமாரர்கள் தங்களுக்கு வேண்டிய தண்ணீர் எடுத்துப் போவார்கள் என்று ஓர் இடத்தைக் காட்டியதும் கௌசல்யா தேவியும் சுமித்திரையும் 'ஐயோ'வென்று அழுதார்கள்.

''சுமித்திரையே, என் மகனுக்காக இந்தத் துறையில் தினமும் உன் மகன் ஆற்றில் இறங்கிச் சுத்தமான ஜலம் ஆசிரமத்துக்கு எடுத்துப் போய் வைக்கிறான் பார்த்தாயா? அண்ணனுக்காக எந்த வேலையும் மிக சந்தோஷமாகச் செய்வான் உன் மகன். குடத்தில் ஜலத்தை நிரப்பித் தோளின்மேல் வைத்து எடுத்துப் போவது அவனுக்குக் கஷ்டமாகத் தோன்றாது'' என்றாள்.

ஆற்றங்கரையில் ராமலக்ஷ்மணர்கள் தந்தைக்காக ஜலக்கிரியை செய்த இடத்தைப் பார்த்தார்கள். தர்ப்பைப் புல் நுனி தெற்கு நோக்கி வைத்திருப்பதைக் கண்டார்கள். பித்ருக்களுக்காக அங்கே எள்ளுப் பிண்ணாக்கு வைத்திருப்பதையும் கண்டார்கள்.

''மகாராஜாவின் பசி தீர்ப்பதற்காகப் பிண்ணாக்கு வைத்திருப்பதைப் பார்த்தாயா? ஆகா, இறந்த பின், உலகம் ஆண்ட ராஜாக்களின் போஜனம் இதுவே! என் இதயம் வெடிக்கவில்லையே!'' என்று சுமித்திரையை அணைத்துக் கொண்டு அழுதாள் கௌசல்யா தேவி.

**ப**ர்ணசாலைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே முகத்தில் தெய்வீக ஒளி வீசும் ராஜகுமாரர்கள் ஓலைக் குடிசையில் உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள். அந்தக் காட்சியைப் பார்த்து நிற்கச் சக்தியிழந்து கீழே விழுந்தார்கள்.

இரு ராஜகுமாரர்களும் எழுந்து தாய்மார்களைத் தூக்கி எடுத்தார்கள். தன்னுடைய தாமரைக் கைகளால் கோசலை ராமனைத் தடவிக் கொடுத்து, இது துக்கமோ, ஆனந்தமோ என்பதை அறியாமல் மயக்கத்தில் மூழ்கினாள். பிறகு சீதையைத் தழுவி, ''மகளே, ஜனகனுக்கு மகளாய்ப் பிறந்து, அயோத்தி மன்னனுக்கு மருமகளாக என் வீட்டில் புகுந்த நீ, இந்தக் காட்டில், இந்தக் குடிசையில் வசித்து வருகிறாயா? வாடிய தாமரை மலரே! தூசி படிந்த தங்க விக்கிரகமே! உன்னைப் பார்த்து நான் படும் துக்கத்தை எப்படிச் சொல்வேன்! நெருப்பில் எரியும் விறகுபோல் என் மனம் எரிகிறது, குழந்தாய்!'' என்றாள்.

மண்ணின் மேல் நின்ற பிரகஸ்பதியைப் போல் விளங்கும் வசிஷ்டருடைய பாதங்களில் சக்கரவர்த்தித் திரு

ராஜாஜி

மகன் விழுந்து வணங்கி, அவருக்கு அருகில் அன்புடன் உட்கார்ந்தான். பரதனும் அடக்கமே வடிவமெடுத்து வந்தது போல் ராமசந்திரன் எதிரில் உட்கார்ந்தான். பல பெரியோர்களும் சுற்றி உட்கார்ந்தார்கள். ராமனுடைய மனம் மாறுமா, பரதன் என்ன பேசப் போகிறான் என்றெல்லாம் ஆவலோடு எதிர் பார்த்து உட்கார்ந்தார்கள்.

"பரதனே! எதற்காக இந்த உடை தரித்துக் கொண்டு வனத்துக்கு வந்தாய், சொல்! ராஜ்ய பரிபாலன காரியங்களை விட்டு விட்டு மான்தோலும் சடையுமாக ஏன் இங்கே வந்து சேர்ந்தாய்? இதை எனக்குச் சரியாகச் சொல், தம்பி!" என்றான்.

"அண்ணா!" என்று பரதன் பல தடவை சொல்ல ஆரம்பித்து, மேலே பேச்சு வராமல் திக்கித் திணறினான். பிறகு தைரியம் செய்து கொண்டு மெள்ளப் பேச ஆரம்பித்தான்:

"உன்னைக் காட்டுக்கு அனுப்பி விட்டு, 'யாரும் செய்யத் துணியாத காரியத்தைச் செய்து விட்டேனே' என்ற துக்கத்தில் வெந்து, மேலுலகம் போய் விட்டார் தந்தை. என்னைப் பெற்றவளும் தான் விரும்பிய சந்தோஷத்தைப் பெற முடியாமல், மகா பாவம் செய்தவளாகி, விதவையுமாகி, சோகத்தில் மூழ்கி நிற்கிறாள். உலகத்தால் பழிக்கப்பட்டு உயிருடன் நரக வேதனையடைந்திருக்கிறாள். எங்களை நீ காப்பாற்ற வேண்டும். இன்றே நீ பட்டாபிஷேகத்துக்குச் சம்மதித்து, உனக்குரிய ராஜ்யத்தை அடைய வேண்டும். இதற்காகவே ராஜ்யத்துப் பொதுமக்களும், சேனையும், சுவர்க்கம் எய்திய அரசனுடைய தேவிமார்களும் எல்லோரும் இங்கே வந்து காத்திருக்கிறார்கள். நீ இதை அருள வேண்டும் - மறுக்கக் கூடாது. இதுவே அனைவருடைய துக்கத்தையும் தீர்த்து, குலதருமத்தையும் கெடாமல் காப்பாற்றும். உரிய அரசனில்லாமல் ராஜ்யம் ஒரு விதவையின் நிலையிலிருக்கிறது. அதை அகற்றி, மங்களகரமாக்கக் கடவாய்! பூரண சந்திரனைப் போல் இருட்டை அகற்றி, நாட்டை ஜொலிக்கச் செய்வாய். இதோ மந்திரிகள் இருக்கிறார்கள், அவர்களும் நானும் உன் பாதங்களில் விழுந்து வணங்கிக் கேட்டுக் கொள்கிறோம். அண்ணா! இந்தப் பிரார்த்தனையை



மறுத்துத் தள்ளி விடாதே!''

இப்படிச் சொல்லி ராமசந்திரனுடைய காலைப் பிடித்துக் கொண்டான் - தீரனான பரதன் கண்களில் நீர் ததும்ப.

பரதனைத் தழுவியெடுத்து ராமன் சொல்லுகிறான்.

''அப்பனே! நாம் நற்குலத்தில் பிறந்தோம். நல்ல முறையில் வளர்க்கப்பட்டோம். நீயும் நானும் ஒரு நாளும் தவறு செய்ய மாட்டோம். உன்னிடத்தில் எள்ளளவேனும் நான் குற்றங்காணவில்லை, நீ துக்கப்பட வேண்டாம். பெற்ற தாயையும் நீ குற்றம் கூற வேண்டாம். நம்முடைய பண்பாட்டுக்கு இது தகாது. நம்மைப் பெற்ற தந்தை நமக்கு எந்த ஆணையும் இடலாம். அது அவருடைய உரிமை. வனத்துக்கு அனுப்புவதும், ராஜ்யாபிஷேகம் செய்வதும் இரண்டும் அவருடைய உரிமை. தாயையும் தந்தையையும் கௌரவிப்பது புதல்வர்களாகிய நம்முடைய கடமை. அவர்கள் இருவரும் எனக்கு இட்ட ஆணையை நான் ஒப்புக் கொள்ளாமலிருக்க முடியுமா? 'வனம்போ!' என்று தந்தை சொன்னதை நான் மறுப்பது தகுமா? உனக்கு ராஜ்யப் பொறுப்பைத் தந்தார். எனக்கு வனவாசம் தந்தார். இப்படி நம்மிருவருக்கும் வாழ்க்கையை வகுத்துக் கொடுத்து மரணமடைந்தார். அதை நாம் புறக்கணிக்கலாகாது. நீ ராஜ்ய பரிபாலனம் செய்து அவர் ஆணையை நிறைவேற்றுவதில் ஒரு குற்றமுமில்லை. அது உன் கடமையுமாகும். நானும் பதினான்கு வருஷங்கள் தண்டகாரண்யத்தில் தந்தையின் அந்திமக் கட்டளையை நிறைவேற்றுவேன். அதுவே தருமம். தேவராஜனுக்குச் சமமாக இருந்த நம்முடைய தந்தை சொன்னதை நாம் பக்தியுடன் செய்து தீர்க்க வேண்டும். தகப்பனார் ஆணையை நிறைவேற்ற இயலாமல், அதற்குப் பதில் உலகமெல்லாம் எனக்குக் கிடைப்பதானாலும் அதைப் பெற்றுக் கொண்டு நான் திருப்தியடைய முடியாது'' என்றான் ராமன்.

இதைக் கேட்ட பிறகும் பரதன் மீண்டும் மீண்டும் ராமனைக் கேட்டுக் கொண்டான். தன்னைக் குறித்து வந்த அனர்த்தம், அது திருத்தப்படாமல் போனால் தன்னுடைய பாவம் தீராமல் நின்று போகும் என்று பரதன் வருந்தப் படுகிறான் என்பதைக் கண்டு ராமன்,

''நீ உன்னை நிந்தித்துக் கொள்ள வேண்டாம். உன் பொருட்டு இது நடந்து விட்டது என்று எண்ண வேண்டாம். அனைத்துக்கும் விதியே காரணம். துக்கத்தை விடு. அயோத்தியைக்குத் திரும்பிப் போய் ராஜ்ய பரிபாலனம் செய். நம்முடைய தந்தை சொன்னபடி நாம் இருவரும் நடக்க வேண்டும். அவருடைய கட்டளையை நாம் நிராகரித்தல் தகாது. உன்னிடத்தில் ஒப்புவித்த ராஜ்ய பாரத்தை நீ தாங்கியே தீர வேண்டும்'' என்றான்.

பரதனுடன் வந்த அயோத்தி நகரத்து மக்களுக்குச் சக்கரவர்த்தித் திருமகனுடைய உறுதியைப் பார்த்து ஒரு பக்கம் மகிழ்ச்சியும் ஒரு பக்கம் துக்கமும் உண்டாயிற்று. பரதனுடைய அன்பையும் பக்தியையும் களங்கமற்ற உள்ளத்தையும் பார்த்துப் பார்த்து, 'இத்தகைய ராஜ குமாரர்களைப் பெற்றோமே நாம்!' என்று மகிழ்ந்தார்கள்.

(தொடரும்)

## ஊதித்தள்ளிவிட முடியாத ஊதுபத்தி லாபங்கள்!

வெளி நாட்டுக்கு இந்திய இசையை ரவிசங்கர் அறிமுகப்படுத்திய போது, கூடவே அகர்பத்தியையும் அறிமுகப்படுத்தி வைத்தாலும் வைத்தார், அயல்நாட்டில் சக்கைப்போடு போடுகிறது அகர்பத்தி. இதில் பெரும் பங்கு கர்நாடகாவுக்குத்தான்.

அகில இந்திய அகர்பத்தி உற்பத்தியாளர் சங்கம் மொத்தமாக 250 கோடி ரூபாய்க்கு விற்பனை இருக்கக்கூடும் என்று மதிப்பிட்ட போது, நேஷனல் கௌன்சில் ஃபார் அப்ளைட் எகனாமிக் ரீசர்ச் ஆய்வு, 89-90 ஆம் ஆண்டு கணக்குப்படி, இது 750 கோடி ரூபாய் என்கிறது! இதில் 150 கோடி ரூபாய் ஏற்றுமதியில் மட்டும் கிடைக்கிறது.

''இது லட்சக் கணக்கான பேர் பணிபுரியும் குடிசைத் தொழில். அதனால் நீங்கள் இரண்டாவதாகக் குறிப்பிட்ட புள்ளி விவரம் உண்மையாகவே இருக்கலாம்!'' என்கிறார் ஊதுபத்தி உற்பத்தியாளர் சங்கத் தலைவர் பி.ஆர். ரகுநாத்.

'இதற்கு மின்சாரம் தேவையில்லை. அதிக முதலீடும் தேவையில்லை. கிராமப்புற வேலை வாய்ப்புகளில் இதற்கு முதலிடம் உண்டு. அப்படியும் ஏனோ மத்திய-மாநில அரசுகள் இதற்கு ஊக்கம் அளிக்கும் விதத்தில் செயல்படுவதில்லை' என்ற அங்கலாய்ப்பு உற்பத்தியாளர் மத்தியில் தெரிகிறது.

அடிப்படைக் கச்சாப் பொருளைத் தரும் சில வகை மரங்களும், மூங்கில்களும் காடுகளில்தான் கிடைக்கின்றன. வனத்துறைச் சட்டங்களின் இடையூறுகளும் இத் தொழிலின் வளர்ச்சியைப் பாதிக்கிறதாம்.

# கிராம வாசியும் கேட்கிறான்: "டாலர் இருக்கா, டாலர்?"

- கர்நாடகா தொழிலதிபர்கள் பேட்டி



● விநோத் அகர்வால்

**கர்நாடகா தொழிலதிபர்கள் என்றதுமே ரமேஷ் பய், விஜய் மல்யா என்று எளிதாகப் பிரபலங்களின் நீண்ட பட்டியல் போடலாம். எனினும் அங்கும் தொழிலதிபர்களுக்குப் பிரச்னை இல்லாது போகவில்லை. தொழில்துறை வளர்ச்சியில் தொழிலதிபர்கள் காண்பிக்கும் ஆர்வம், அரசு அவர்கள் பால் காண்பிக்கும் அக்கறை எத்தகையது?**

"புதிய தொழில்களைத் தொடங்குங்கள் என்று விளம்பரங்கள் செய்கிறது அரசு. ஆனால் பெருமளவு ஊக்கங்கள் பேப்பரோடு நின்று விடுகின்றன. நடைமுறைச் சிக்கல்கள் நிறைய இருக்கின்றன. வங்கியும் சரி, கர்நாடக மாநில நிதி கார்ப்பரேஷனும் சரி, மூன்றில் ஒரு பங்கு முதலீட்டுக் கடன் தொகைக்கு ஈடான பாதுகாப்புப் பெற்றுக் கொண்டு, நிதியைத் தருகிறார்கள். ஆனால் நாலு லட்ச ரூபாய் முதலீடு செய்யும் ஓர் ஒப்பந்தத்தைப் பதிவு செய்ய, 50,000 ரூபாய் செலவிட வேண்டியிருக்கிறதே! இவை போன்ற அநாவசியங்கள் அகற்றப்பட்டால் சிறு தொழில் துறை நிச்சயம் வளர்ச்சி அடையும். மின்சாரத் தட்டுப்பாட்டையும் நீக்கினால்தான் இடைவிடாத உற்பத்தி இருக்கும்!" - சொல்கிறவர் விநோத் அகர்வால்; ஓகோல்ட் எலக்ட்ரானிக்ஸின் மானேஜிங் டைரக்டர். பஞ்சாபிலுள்ள ஃபஸிலிகாவிலிருந்து 15 ஆண்டுகளுக்கு முன்பு பெங்களூரில் குடியேறிய இளம் தொழிலதிபர்.

ஜெர்மனிக்கும், இத்தாலிக்கும் கிரானைட் கற்கள் ஏற்றுமதி செய்யும் இன்னொரு தொழிலதிபர் தேவராஜ் ஹெக்டே. ஒவ்வோர் இடத்தில் கிடைக்கும் கற்களின் தரத்தைப் பொறுத்தே ராயல்ட்டி தொகை நிர்ணயிக்கப்படுகிறது.

"கிராமவாசிகளிடம் உள்ள பட்டா நிலங்களிலிருந்தும் கற்கள் எடுப்பதுண்டு. இத்தனைக்கும் அந்தக் கிராமவாசிகள் கல்வியறிவு இல்லாதவர்கள்தாம். ஆனாலும், நாம் போய்க் கேட்டவுடனேயே, 'டாலர் இருக்கா, டாலர்?' என்று வெகு கறாராய்க் கேட்கிறார்கள்!" என்கிறார்.

இந்த கிரானைட் தொழிலில் அரசியல் குறுக்கீடு சாதாரணமாய் நிறையவே இருக்கும். "இப்போதைய முதல்வர் கண்டிப்பானவர். பொலிடிகல் பிரஷர் எதுவும் இல்லாமலே என் தொழிலைச் செய்ய முடிகிறது!" என்கிறார் தேவராஜ் ஹெக்டே.

கணிதத் துறையில் ஒரு புரட்சியை உண்டாக்கும் அளவுக்கு, இந்தியக் கணிதத்தின் அடிப்படையில், அதிநவீன ஸாஃப்ட்வேர் தயார் செய்யும் கம்ப்யூட்டர் துறையில் ஈடுபட்டிருக்கும் இன்னொரு இளம் தொழிலதிபர் பி. கே. ஸ்ரீவத்சா....



● ராஜசேகர ரெட்டி

"தொழில் வளர்ச்சிக்கு ஏற்ற சூழ்நிலை கர்நாடக மாநிலத்தில் நிலவுகிறது. ஆனால் முக்கியத் தேவையான மின்சாரம் குறைவாகவே கிடைக்கிறது. தொழில் வளர்ச்சியின் அபரிமிதமான வேகத்தையும், தேவையையும் மாநில அரசு எதிர்பார்க்கவில்லை. இருபது வருடங்களாகவே மின் தேவையைச் சரியாகக் கணக்கிடாமல் போய் விட்டோம்!" என்கிறார் ராஜசேகர ரெட்டி - மாநிலம் முழுதுமுள்ள சுமார் 200 சேம்பர்ஸ் அஃப் காமர்ஸ் கூட்டமைப்பின் தலைவர்.



● தேவராஜ் ஹெக்டே

இப்போது அரசு விழித்து கொண்டு விட்டதாம். 3000 மெகாவாட் மின்சாரம் உற்பத்தி செய்ய, சில அயல்நாட்டு முதலீட்டாளர்களுடன் ஒப்பந்தங்கள் கையெழுத்தாகியிருக்கின்றன. அதுவரை? மின்சாரம் அதிகம் தேவைப்படாத தொழில்களை இனம் கண்டு ஊக்குவிக்குமாம் அரசு. கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர் இதில் ஒன்று.

"பின்தங்கிய பகுதிகள் தொழில் வளர்ச்சி பெறச் சில திட்டங்களை அரசு வகுத்திருக்கிறது. ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வொரு விதச் சலுகை; முதலீட்டுத் தொகையில் மான்யம் 15 சதவிகிதம் முதல்

# "சிவப்பு நாடாவை வெட்டி எறிந்து விட்டோம்!"

## - தொழில் துறை அமைச்சர் நாகம்மா கேசவமூர்த்தி பேட்டி

**கேள்வி :** உங்கள் மாநிலத்தின் தொழில் வளர்ச்சி எப்படியிருக்கிறது?

**திருமதி நாகம்மா கேசவமூர்த்தி :** தொழில் வளர்ச்சியில், அனைத்திந்திய அளவில் நான்காவது இடம் வகிக்கும் மாநிலம் எங்கள் மாநிலம். இன்னும் சொல்லப் போனால், சுதந்திரத்திற்கு முன்பே எங்கள் மாநிலத் தொழில் வளர்ச்சி மற்ற மாநிலங்களுக்கு முன்னோடியாக இருந்திருக்கிறது. இதற்குக் காரணம், எங்கள் மாநிலத்திலுள்ள இயற்கை வளம், மனித ஆற்றல் மட்டுமல்ல; விஸ்வேஸ்வரய்யா என்கிற மாபெரும் நிபுணர் திட்டங்களை வகுத்தார் என்பதும்தான்! இன்றைக்கும் பெங்களூர் நகரம் 'எலக்ட்ரானிக் நகரம்' என்றும் எங்கள் மாநிலம் 'சிலிகான் வேலி ஆப் இந்தியா' என்றும்தான் அழைக்கப்படுகிறது. புதிதாகத் தொழில் துவங்கும் இளம் தொழிலதிபர்கள், மற்ற மாநிலத்தவர்கள், வெளிநாட்டு இந்தியர்கள் ஆகியோரை வரவேற்பதோடு, பன்னாட்டு நிறுவனங்களையும் வரவேற்கிறோம்.

**கேள்வி :** புதிய புதிய தொழில் துவங்கும் போது, மின்சாரத்தின் தேவையும் அதிகரிக்குமே, அதற்கு என்ன செய்கிறீர்கள்?

**திருமதி நாகம்மா :** இதுவரை நீர் மின் திட்டங்களை மட்டுமே நம்பியிருந்தோம் என்பதால், பற்றாக்குறை இருக்கத்தான் செய்கிறது. அதனால், தனியார் மின் உற்பத்தியோடு, அனல்மின் திட்டங்கள், அணு மின் திட்டங்கள் போன்றவை பற்றியும் யோசித்துக் கொண்டிருக்கிறோம்.

**கேள்வி :** புதிதாகத் தொழில் துவங்குவோருக்கு என்னென்ன சலுகைகள் தருகிறீர்கள்?

**திருமதி நாகம்மா :** எங்கள் மாநிலத்தை - தொழில் வளர்ச்சி முறையில் - ஏ,பி,சி என்று மூன்று பகுதிகளாகப் பிரித்துள்ளோம். பெங்களூர் நகரம் ஏ பிரிவில் வருகிறது. இங்கு ஏற்கெனவே பல தொழில்கள் இருப்பதால், இனி இங்கே புதிதாகத் தொழில் துவங்க ஊக்குவிப்பதில்லை என்று முடிவு செய்துள்ளோம். அடுத்து பி பிரிவு. இது ஓரளவுக்குத் தொழில்கள் துவங்கப்பட்ட பகுதி. இது மேலும் வளர வேண்டும் என்பதால் இங்கு தொழில் துவங்குவோருக்கு இருபது சதம் மான்யம் வழங்குகிறோம். சி பிரிவு என்பது தொழிலில் பின் தங்கிய பகுதி என்பதால், அங்கு துவங்குவோருக்கு இருபத்தைந்து சதம் மான்யம் வழங்குகிறோம். மற்றும் உடல் ஊனமுற்றோர், தாழ்த்தப்பட்டோர், மலைஜாதியினர் ஆகியோருக்குச் சிறப்புச் சலுகைகள் உண்டு. மேலும் பெண் தொழிலதிபர்களை ஊக்குவிக்கும் வகையில் ஆறு சதம் பெண்களுக்காக ஒதுக்கீடு செய்திருக்கிறோம். சிறந்த பெண் தொழிலதிபர்களைத் தேர்ந்தெடுத்து, மூன்று அவார்டுகளும் தருகிறோம்.

**கேள்வி :** புதிய தொழிலதிபர்களுக்கான சலுகைகள் என்பது நடைமுறையில் இருக்கிறதா அல்லது வெறுமனே ஏட்டளவில் தான் இருக்கிறதா?

**திருமதி நாகம்மா :** (சிரிக்கிறார்) நிச்சயமாக நடைமுறையில்தான் இருக்கின்றன.

**கேள்வி :** சிவப்பு நாடா முறை மிகவும் இடைஞ்சலாக இருக்குமே?

**திருமதி நாகம்மா :** இந்தத் தடையை உடைப்பதற்காகத்தான் 'உத்யோக மித்ரா' என்ற அமைப்பைத் துவங்கியுள்ளோம். அதில் மூத்த அதிகாரியொருவர் தலைவராக இருக்கிறார். அவர் தொழில் துவங்குவோருக்குத் தேவையான எல்லா வசதிகளையும் - மற்ற பல்வேறு துறையினரோடும் தொடர்பு வைத்துக் கொண்டு - ஏற்பாடு செய்து தருவார். அதோடு, ஒவ்வொரு மாதமும் மின்துறை, ரெவன்யூ, வாட்டர் சப்

---

25 சதவிகிதம் வரை இருக்கும். இது தவிர விற்பனை வரியில் நான்கு, ஐந்து வருடங்களுக்கு முழுத் தள்ளுபடிச் சலுகை கிடைக்கும். ஒருசில பொருட்கள் மீது தவிர, மீதிப் பொருட்கள் மீது நுழைவு வரியை நீக்கி விட அரசு ஒப்புக் கொண்டிருக்கிறது. கர்நாடக மாநில நிதி கார்ப்பரேஷனும் சரி, கர்நாடக மாநில தொழில் முதலீட்டு கார்ப்பரேஷனும் சரி, நிதி உதவிகளில் தாமதம் செய்வதில்லை. புதிய முதல்வர் வந்த பிறகு Single Window System வெகு சீராக இயங்கி வருகிறது!'' என்கிறார் ராஜசேகர ரெட்டி.

ஜூன் முதல் வாரத்தில், மாநிலத்தின் புதிய தொழிற் கொள்கையை அறிவிக்கப் போவதாக முதல்வர் வீரப்ப மொய்லி சொல்லியிருக்கிறார். அதில் சில புதிய சலுகைகளையும், ஊக்குவிப்பு அறிவிப்புகளையும் தொழில் அதிபர்கள் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அத்தோடு நின்று விடாமல், வெகு விரைவில் தொழில் வளர்ச்சியடைந்த குஜராத் மாநிலத்துக்கு, தொழிலதிபர்களை முதல்வரே அழைத்துப் போகப் போவதாகவும் அறிவித்திருக்கிறார். 'குஜராத்தை விடவும் கூடுதலாக ஊக்குவிப்புகள் தருகிறேன்!' என்று இப்போதே அறிவித்திருக்கிறார் மொய்லி.

இவை ஒருபுறம் இருந்தாலும், தொழிலாளர் துறை அமைச்சகம், தொழிலதிபர்களுக்குத் தொல்லைகள் சில அளிப்பதை,

ளைஸ் போன்ற பல்வேறு துறையினரையும் ஒன்றாகக் கூட்டி விவாதிக்கிறோம். அப்போது பல்வேறு துறை சம்பந்தப்பட்ட வேலைகளும் பிரச்னைகளும் விவாதிக்கப்பட்டு, சுலபமாக நடக்கத் தேவையான வழிமுறைகள் உடன் தீர்மானிக்கப்படுவதால், தொழில் துவங்குவோருக்கான வசதிகள் விரைவாகச் செய்யப்பட்டு விடுகின்றன. அதனால் சிவப்பு நாடா முறை தவிர்க்கப்பட்டு விடுகிறது. அதோடு எந்த நேரத்திலும் தொழிலதிபர்கள் என்னைச் சந்தித்துப் பேசித் தீர்வு காணலாம்.

**கேள்வி :** பொதுத் துறை நிறுவனங்களின் செயல்பாடுகள் உங்கள் மாநிலத்தில் எப்படியிருக்கிறது?

**திருமதி நாகம்மா :** நஷ்டத்தில் இயங்கும் பொதுத் துறை நிறுவனங்களை என்ன செய்வது என்று யோசித்து, அதற்கு மூன்று வழிகளில் தீர்வு காணலாம் என்று முடிவு செய்திருக்கிறோம். ஒன்று : இன்னும் கொஞ்சம் முதலீடு கொடுத்துப் பார்ப்பது. இரண்டு : லாபத்தில் இயங்கும் நிறுவனங்களோடு இணைத்து விடுவது. மூன்று : தனியாரிடம் ஒப்படைத்து விடுவது. இந்த வழிகளில் ஏதாவதொன்றை அந்தந்த நிறுவனங்களுக்குத் தகுந்தபடி கடைப்பிடிக்கப் போகிறோம்.

**கேள்வி :** கிராமப்புறத் தொழில் வளர்ச்சி எப்படி?

**திருமதி நாகம்மா :** முன்பெல்லாம் ஒரு பகுதியில் பல்வேறு வகையான தொழில்களையும் ஆரம்பித்ததால், அதை மேற்பார்வையிடுவதற்குப் பல்வேறு இலாகாக்கள் தங்கள் ஊழியர்களை ஒரே பகுதிக்கு அனுப்ப வேண்டியிருந்தது. அதுவும் பல்வேறு ஊர்களில் என்பதால் அந்த சூபர்வைசர்கள் ஒவ்வோர் இடத்திற்கும் விரைவாகச் சென்று பார்வையிட முடியாமல் இருந்தது. இது உற்பத்தியைப் பாதிக்கிறது என்பதால், இப்போது ஒரு பகுதியில் ஒரே மாதிரியான தொழிலைத்தான் துவங்குவது என்று தீர்மானித்துள்ளோம். அதுவும் தொழிற்பேட்டை மாதிரி ஒரே பகுதியில் - அருகருகே துவங்கும் போது, கண்காணிப்பு அதிகமாக இருக்கும் என்பதால், உற்பத்தியிலும் தொய்வு ஏற்படாமல் இருக்குமல்லவா!



தொழில் துறையில் புதிய தகவல்கள் ஏதும் தெரிய வந்தால் உடன் அவற்றை ஆராய்ந்து பயன்படுத்திக் கொள்ளத் தயாராக இருக்கிறோம். உதாரணமாக தமிழகத்தில் 'ஜெம் கட்டிங்' தொழில் சிறப்பாகச் செயல்பட்டுக் கிராமப்புற மக்களுக்கு நிறைய வேலை வாய்ப்பை அளிப்பதாக அறிகிறோம். அதை எங்கள் மாநிலத்திலும் செயல்படுத்த, விரைவில் தமிழகத்திற்கு விஜயம் செய்ய இருக்கிறேன். அதுபோல் தொழில் துறையில் வேகமாக முன்னேறியுள்ள குஜராத் மாநிலத்திற்கும் சென்று அவர்களுடைய செயல்பாடுகளை நேரில் அறிந்து வர உத்தேசித்திருக்கிறேன்.

**கேள்வி :** புதிதாகத் துவங்கும் தொழிலகங்களில், எண்பது சதம் தொழிலாளர்கள் கர்நாடகத்தைச் சேர்ந்தவர்களாகத்தான் இருக்க வேண்டும் என்று உங்கள் அரசு சொல்கிறது. இந்த நிலை, பல திறமையான தொழிலாளர்கள் புறக்கணிக்கப்பட்டு, அந்த அளவுக்குத் திறமையின்மை ஊக்குவிக்கப்படுவதாக ஆகாதா?

**திருமதி நாகம்மா :** நிச்சயமாக ஆகாது. தங்கள் மாநிலத்தின் தொழில் வளர்ச்சிக்காகத் தங்கள் வாழ்வின் ஒரே நம்பிக்கையான தங்கள் நிலங்களையெல்லாம் கொடுக்கும் கர்நாடக மக்களுக்கு அவசியம் வேலை வாய்ப்பு அளிக்கத்தான் வேண்டும். மீதமுள்ள இருபது சதத்தில் யார் வேண்டுமானாலும் வரலாமல்லவா! அதனால் திறமைக்குறைவு என்பதற்கு இடமே இல்லை.

பேட்டி : **இளங்கோவன்**

தொழிலதிபர்கள், சம்பந்தப்பட்ட அமைச்சரின் கவனத்துக்குக் கொண்டு வந்திருக்கின்றனர். ''தொழில்-வணிக குறைகளைத் தீர்த்து வைப்பதாக அமைச்சரும் சொல்லிவிட்டார்'' என்றார் ராஜசேகர ரெட்டி.

''தனியார் முதலீடு மூலம் மின் உற்பத்தி செய்யும் திட்டம் செயல் வடிவம் பெறும் போது, அவர்கள் அதிக லாபம் கருதி யூனிட்டுக்கு உயர்ந்தபட்ச விலை நிர்ணயித்து விற்கும் அபாயம் இருக்காதா?'' என்று நாம் சந்தேகம் எழுப்பிய போது, தயக்கமின்றி ஒரு கருத்தை வெளியிட்டார் ராஜசேகர ரெட்டி. ''பொருளாதார ஆலோசகர் ராஜா செல்லையா சொன்னதைத்தான் நான் சொல்லப் போகிறேன் : மாநில மின்சார வாரியங்கள் தனியார் மயமாவதுதான் நல்லது. திறமையின்மைக்காக நாடு மொத்தத்தையும் நஷ்டத்தில் மூழ்கடிப்பது தவிர்க்கப்பட இது ஒன்றே வழி!''

**மா**நில தொழில் வளர்ச்சி பற்றி உற்சாகமாகப் பேசிய ராஜசேகர ரெட்டி, ''சிதம்பரம் மட்டும் இன்னும் சில ஆண்டுகள் மத்திய அமைச்சரவையில் நீடித்திருந்தால், வாணிபத் துறை மிகச் சிறந்த பலன்களை அடைந்திருக்க முடியும். தாராளமயமாக்கல் கொள்கையை, நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்கு ஏற்றவாறு வகுத்து, வெகு உத்வேகத்துடன் செயல்பட்ட நாணயமான இளைஞர்!'' என்று புகழ்ந்தார்.

– **சாருகேசி**

# புகழ்வதிலேயே நேரம் போகிறதே!

வட்ட மேஜை

◆ 'ஜெ. வீட்டுக் குழாயில் தண்ணீர் வரவில்லை என்பதற்காக அமைச்சர் நீக்கப்பட்டாரோ என்னவோ' என, தலையங்கம் எழுதியிருக்கிறீர்கள். படித்தால் சிரிப்பு வந்தாலும் நடைமுறைச் செயல்பாடுகளைப் பார்த்தால் நீங்கள் எழுதியது சரி என்றுதான் தோன்றுகிறது.

சென்னை - 78, வி. சீனுவாசன்.

◆ அந்தக்கால அமைச்சரவை மிகவும் குறைந்த நபர்களையுடையதாகத்தான் விளங்கியது. இப்போதோ அது போல மூன்று மடங்கு அதிகரித்துள்ளது. காரணம், அப்போது ஒரே நபர் பல துறைகளை நிர்வாகிக்கும் திறன் இருந்தது. இப்போது முதல்வரைப் புகழ புதிது புதிதாக என்ன வார்த்தை கண்டுபிடிக்கலாம் என்பதிலேயே காலம் கழிக்கிற போது, பல துறைகளை எப்படி நிர்வகிக்க முடியும்?

அரகண்டநல்லூர், ஆர். விஜி.

◆ மதுமதி படத்தின் ஒரே ஆறுதல் இசையும் பாடல்களும்தான். அதைப்பற்றி ஒரு வரி கூட விமர்சனத்தில் குறிப்பிடவில்லையே, உம் விமர்சகர் என்ன அவுரங்கசீப்பின் கொள்ளுப் பேரனா?

அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

◆ நகரத்துச் சூழ்நிலையில் சில காலம் வாழ்ந்து விட்டு, மலரும் நினைவுகளோடு தங்களின் சொந்த ஊருக்குத் திரும்பும் ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் நிகழும் மனப் போராட்டத்தைக் 'காலம் கரைத்த கனவுகள்' சிறுகதை அப்பட்டமாய் உணர்த்தியது.

போடிநாயக்கனூர், ரா. நாச்சிமுத்து.

◆ 'கொஞ்சம் கசக்குங்கள் மூளையை!' என்ற புதிர்ப் பகுதியின் இரண்டாவது புதிருக்கு எளிய முறையிலேயே விடை காண முடியுமே! ஏழு முழு டின் எண்ணெயில் பாதிப் பாதியை காலி ஏழு டின்களில் ஊற்றி விட்டால் 21 பாதி எண்ணெய் டின்கள் கிடைக்கும். அதை மூன்று பிள்ளைகளும் சமமாக ஏழு எடுத்துக் கொள்ளலாமே!

மதுரை, இரா. லதா.

◆ இந்தியன் ஏர்லைன்ஸின் சரிவும் இமேஜை நிமிர்த்த முடியுமா என்பது வாசுதேவின் பேட்டியிலிருந்து முடியாது என்றே தோன்றுகிறது. முதலில், அமைச்சர்களாக வருவோரின் புத்தியை நிமிர்த்துவதற்கு வழி ஏற்படுமானால், பெரும்பாலான அரசுத் துறை நிறுவனங்களின் சரிவையும் எளிதாக நிமிர்த்தி விட முடியும்.

திருச்சி - 9, கண்ணம்மா இராமசாமி.

◆ 'விண்ணைச் சாடும் தனியார் விமானங்கள்' அட்டைப்படக் கட்டுரை கண்டேன். தனியார் விமானங்கள் மட்டுமா விண்ணைச் சாடுகின்றன? அவர்களது சுறுசுறுப்பு, நேரந் தவறாமை, மதுவையும் புகையையும் விமானத்துள்ளேயே அண்டவிடாத துணிச்சலான செயல், அயல்நாட்டு விமான உபசரிப்பின் பிரதிபலிப்பு, தரமான உணவு - இவை எல்லாமும் சேர்ந்து அவர்களது பெருமைகளை விண்ணிலிருந்து உலகம் பூராவும் தூவி விடுகின்றனவே!

பாண்டிச்சேரி - 3, தா. செல்வராசன்.

◆ 'விடைபெறுகிறார் சுஜாதா' என்ற தலைப்பைப் பார்த்தவுடன் திடுக்கிட்டேன். கட்டுரையைப் படித்து முடித்ததும்தான் எனக்கு நிம்மதிப் பெருமூச்சு வந்தது! இனி இன்னும் அதிகமான படைப்புகளை நாங்கள் அவரிடமிருந்து எதிர் பார்க்கிறோம்!

மதுரை - 10, பி. ராஜசேகரன்.

◆ தமிழினியனின் 'பரிசு' சிறுகதை சிறப்பாக இருந்தது. வழவழ என்று வளர்த்தாமல் 'நறுக்' கென்று முடித்தது சிறப்பு.

சிதம்பரம், ஜி. வெங்கி.

◆ 'பாவம் பா.ம.க.' முதல் பக்கம் கண்டேன். எப்படி ஒரே பக்கத்தில் பிறப்பு, வரலாறு, முடிவு என்று அத்தனையையும் இத்தனை சிறப்பாகவும் தெளிவாகவும் உங்களால் சொல்ல முடிகிறது!

மருங்கூர், பால. கிருஷ்ணமூர்த்தி.

◆ ஜெ. இல்லாத கட்சியை மக்கள் மதிக்க மாட்டார்கள். அது நாளடைவில் ஒன்றுமில்லாமல் போய் விடும் என்று தராசு சொல்லியிருக்கிறார். இதுபோன்று அனைவரும் சொல்வதால்தான் அவர் (ஜெ) உச்சாணிக்கிளையில் உட்கார்ந்து கொண்டு இறங்க மாட்டேன் என்கிறார்.

தக்கோலம், அ. முஸ்தபா.

◆ "குண்டு வெடிப்புக்குப் பயந்து அரசியல்வாதிகள் பூமாலையைக் கண்டு ஒதுங்கினாலும், சிலைகளுக்கும், கட்-அவுட்களுக்கும் மாலைகள் அணிவிக்கப்படும் வரை வியாபாரிகள் கவலைப்பட வேண்டியதில்லையே!"

தூத்துக்குடி - 1, என். சம்பத்.

◆ 'பிரியாவுக்குப் பிரியாவிடை!' கண்டேன். துப்பறியும் பதவியிலிருந்து பிரியா ஓய்வு பெற்று விட்டாலும் நட்சத்திர அந்தஸ்து பெற்று விட்டதே!

கும்பகோணம், டி. எஸ். சீதாராமன்.

**பரிசுக் கடிதம்**

**புதிதாகப் பதவியேற்ற அமைச்சர் ஒருவர், "எனக்கு முதல்வர் போட்ட பிச்சை" என்று உணர்ச்சிவசப்பட்டுப் பேசியுள்ளார். போகிற போக்கைப் பார்த்தால், இனி வருங்காலத்தில் போயஸ் தோட்டத்தின் வாசலில் ஒவ்வொரு எம்.எல்.ஏவாகப் போய் நின்று, "அம்மா... தாயே! எம்.எல்.ஏ.வா ஆகி ரொம்ப நாளாச் சும்மா; மிச்சம் மீதி இருக்கிற மந்திரி பதவியிலே ஒன்னு போடும்மா, மகராசி!" என்று துண்டு ஏந்திப் பிச்சை கேட்டாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை!**

**இராசிபுரம், எஸ். கற்பகலட்சுமி.**

# ஆன்ட்டியுடன் ஒரு பேட்டி



* மாலாஸ்ரீ

**மா**லாஸ்ரீ இல்லாமல் கர்நாடகச் சிறப்பிதழா என்று நண்பர் கேட்டார். சரிதான், பிடித்தால் போயிற்று என்று டெலிபோனில் அணுகினால், நாம் பெங்களூருக்குப் போகையில் அவர் மெட்ராஸுக்கும், நாம் மெட்ராஸ் வருகையில் அவர் பெங்களூருக்குமாய் ஏரோப்ளேனில் ஊஞ்சல் ஆடிக் கொண்டிருந்தார். ஒரு வழியாய்ச் சென்னையில் சிக்கின போது விதி வேறு ரூபமாய்க் குறுக்கிட்டது. ரூபத்தின் பெயர் 'ஆன்ட்டி'. இனி பேட்டி :

''நீங்க கன்னடத்துல நடிக்க ஆரம்பிச்சி எத்தனை வருஷம் ஆறது?''

மாலா : அது ஒரு... ரெண்டு, ரெண்டரை...

ஆன்ட்டி : நோ, நோ. மூணு, மூணரை வருஷத்துக்கு மேல ஆயிடிச்சி.

''இதுவரைக்கும் எத்தனை படங்கள் அங்க பண்ணியிருக்கீங்க?''

மாலா : அது வந்து...

ஆன்ட்டி : அம்பது படத்துக்கு மேல இருக்கும்.

மாலா : போன வருஷம் மட்டும் 16 படங்கள் பண்ணியிருக்கேன்.

ஆன்ட்டி : நோ. நோ. 22 படங்கள்.

''உங்க முதல் படம் எப்படி?''

மாலா : 'நஞ்சுண்டே கல்யாணம்' - இதுதான் கன்னடத்துல முதல் படம். அது...

ஆன்ட்டி : சூப்பர் ஹிட்! சூப்பர் ஹிட்!

''அதுக்கு அடுத்த படம்?''

மாலா : கிட்டத்தட்ட எட்டு மாசம் கழிச்சுத்தான் அடுத்த படம் வந்தது.

ஆன்ட்டி : நீ கம்மாரு. நிறைய படம் வந்தது. நிறைய பேர் கூப்ட்டாங்க. நல்ல கேரக்டர் இல்லேங்கிறதுனால ரிஜக்ட் பண்ணிட்டோம்.

''தமிழ்ல ஒண்ணு, ரெண்டு பண்ணியிருக்கீங்க இல்ல?''

மாலா : ஆமா. பாண்டியராஜனோட சின்ன சின்ன ஆசைகள், அப்புறம் ஆத்தா நான் பாஸாயிட்டேன்.

''தொடர்ந்து ஏன் நடிக்கலை?''

மாலா : இந்த ரெண்டுமே சரியாப் போகலை. அப்புறம்...

ஆன்ட்டி : நோ நோ. சுமாராப் போச்சு. நிறைய பேர் கூப்ட்டாங்க. அப்ப கன்னடத்துல பிஸி ஆயிட்டதுனாலதான் இங்க பண்ண முடியலை.

''கன்னடத்துல என்ன மாதிரி ரோல் பண்றீங்க?''

மாலா : வெறும் ஆக்ஷன் ஹீரோயினாத்தான் கேரக்டர் வருது...

ஆன்ட்டி : இல்ல, இல்ல... எல்லாவிதமான கேரக்டர்ஸும் வருது. எல்லாமே பண்றா.

''தமிழ்ல ஒர்க் அவுட் ஆகாம, அங்க போய் மட்டும் எப்படி ஜெயிச்சீங்க?''

மாலா : அது எப்படீன்னு...

ஆன்ட்டி : ...நான் சொல்றேன்! நான் சொல்றேன்! இவளுக்கு எக்கச்சக்க திறமை. கன்னடத்துக்குப் போன போது அவங்களுக்கு இவ ஸ்டைல் ரொம்பப் பிடிச்சிப் போச்சு. இவ ஃபைட் பண்ற வேகம் ரொம்ப பிடிச்சிப் போச்சு. அதான் இன்னி வரைக்கும் ஒரு படம் கூட ஃபெய்லியர் ஆகாம சக்ஸஸ்ஃபுல்லா ஓடுது.

''ஒண்ணு கூடவா பெயிலியர் ஆகலை?''

மாலா : நாலஞ்சு படம் ஃபெயிலியர் ஆயிருக்கு. 'பெள்ளி மோடுகளு'ன்னு ஒரு படம், அப்புறம் 'சிந்தூர திலகா', 'மாங்கல்ய பந்தனம்', 'கிரக லட்சுமி'. அப்புறம்...

ஆன்ட்டி : நோ! நோ! நோ! நோ! நீ கம்மாயிரு. மாங்கல்ய பந்தனம் நல்லா போச்சு. கிரகலட்சுமி நல்லா போச்சு. அப்புறம்... எல்லாமே நல்லா போச்சு.

''கன்னடத்துல ஸ்டோரி ட்ரெண்ட் எப்படி இருக்கு?''

மாலா : அது... ஒரு மாதிரி ஃபேமிலி... ஃபைட்டிங்...

ஆன்ட்டி : அதெல்லாமில்லே. ரொம்ப நல்லாருக்கு! ரொம்ப நல்லாருக்கு! அற்புதமான கதைகள், எல்லாம்!

ஒன்று புரிந்தது. நடிகைகளுக்கு டப்பிங் - சினிமாவில் மட்டுமல்ல!

- ரா.

# சவுராண்— ஜெயலலிதா: யார் அரிச்சந்திரன்?



● அரிச்சந்திரன்...



● ....யார்?

● தி. ரங்கசாமி, கோயமுத்தூர்.

*? குழந்தையைக் கூட டாடா சொல்லப் பழக்குகிறோம். டா-டா, பை-பை இதற்கெல்லாம் என்ன அர்த்தம்?*

! டா - தாங்க்யூ என்பதன் சுருக்கம். 'நன்றி - நன்றி' என்பதுதான் பொருள். பை-பை என்பது God be with you என்பதன் சுருக்கச் சிதைவு.

● இரா. கல்யாணசுந்தரம், மதுரை – 9.

*? பாகிஸ்தானில் நவாஸ் ஷெரீஃபின் புத்துயிர் பற்றித் தங்கள் கருத்து?*

! வரவேற்கத்தக்க நீதிமன்றத் தீர்ப்பு. ஜனநாயகத்தின் ஆன்மாவுக்கு ஆபத்து வரும் போதெல்லாம் நீதிமன்றங்கள் இப்படித்தான் முன்வந்து உதவ வேண்டும். ஆனால் ஜனாதிபதி மேலெழுந்தவாரியாகத் தீர்ப்புக்குத் தலைவணங்கினாலும் உள்நோக்கோடும் (என் தோட்டத்தில் பலவித குரிகளில் திராட்சைகள் உண்டு) வேறு ஓர் சந்தர்ப்பத்தில் பேசியிருக்கிறார். இன்னொரு பக்கம் அவரது ராஜினாமா கோரப்பட்டுள்ளது. பேநசிர் புட்டோவுடன் சமாதானமாகப் போகவும் ஒத்துழைப்பை நாடவும் பிரதமர் ஷெரீஃப் பகிரங்கமாக முன்வந்தது ஜனாதிபதியை அடக்கி வைக்கவே என்று கருதலாம். ராணுவம் எல்லாவற்றையும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறது. நாடகம் இன்னும் முடியவில்லை.

● எம். பிரபு, குமராட்சி.

*? யாருக்கு இப்போ நல்ல நேரம்?*

! தண்ணீர் லாரி டிரைவர்களுக்கு. தெருவுக்குத் தெரு, வீட்டுக்கு வீடு சில்லறை.

● கோதை மணாளன், கோவை.

*? நமது பிரதமர், புதிய பாக். பிரதமருக்குப் பாராட்டுத் தெரிவிப்பதில் தாமதம் செய்தார் என்று கேலி செய்தீர்களே... இப்போது என்ன சொல்கிறீர்கள்?*

! மஜாரிக்கு ராவ் வாழ்த்து(பாராட்டு அல்ல)த் தெரிவிக்காமல் இருந்ததாலோ ஷெரீஃபுக்கு அபரிமிதமான நம்பிக்கையோடு வாழ்த்துத் தெரிவிப்பதாலோ இந்தியா-பாக் நல்லுறவு மலர்ந்து விடப் போவதில்லை. அதற்கு ராவ் இன்னும் நிறைய உழைக்க வேண்டும். பொதுவாக ஒரு நாட்டின் தலைமை மாறும் போது வாழ்த்துவது மரபு. இது வரவேற்பு அல்லது பாராட்டு ஆகி விடாது. உரிய முறையில் வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்துச் சொல்லலாம்.

● ஆர். ராகவன், கும்பகோணம்.

*? விஞ்ஞான சேவை புரிந்தமைக்காக சுஜாதாவுக்கு தேசிய விருது வழங்கியிருப்பது பற்றி...?*

! சாமானியருக்கும் விஞ்ஞானத்தில் ஆர்வத்தை வளர்த்தவர் என்பதற்காக அளிக்கப்பட்ட விருது, சரியான நபருக்குத்தான் போய்ச் சேர்ந்திருக்கிறது. ஆனால் அவரைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புவோர் சரியான முறையில் செயல்படுவதாகக் கூற முடியாது.

● சிது. வைரவன், சென்னை – 14.

*? பா.ம.க. "உடைந்த" காரணம் பற்றி முதல் பக்கத்தில் அலசியிருக்கிறீர்களே, கொஞ்சம் கூட விரிசல் விடாத பா.ஜ.க. பற்றியும் இப்படி ஒரு முதல் பக்கக் கட்டுரை எழுதுங்களேன்?*

! முதல் பக்கம் என்ன, 64 பக்கச் சிறப்பிதழே வெளியிட்டிருக்கிறதே, கல்கி, ஜோஷியின் கன்யாகுமரி - காஷ்மீர் யாத்திரை தொடங்கிய சமயத்தில். நாம் ஒன்றும் பா.ஜ.கவின் விரோதிகளல்ல; என்றும் நண்பர்களே. நமது விமர்சனங்களும் நட்பின் அடிப்படையில்தான்.

● ப. விஜயபாலன், சென்னை

*? இன்றைய அரசியல்வாதிகளில் சிந்தனை ஒன்றுடையார் என்று யாரைச் சொல்லலாம்?*

! ஏன், சு.சுவாமி இருக்கிறாரே!

● பாலு, கம்பரசன்பேட்டை.

*? ராஜாஜி கூட அன்பு வழியைப் போதித்தார், என்கிறீர்கள். போதனைக்கு லட்டான சமாசாரம் அது. நடைமுறையில் விரல் மடக்குகிற மாதிரி சில சம்பவங்களாவது கூற முடியுமா?*

! என்ன சார் இப்படிக் கேட்டு விட்டீர்கள்? நமக்கு சுயராஜ்யம் வந்ததே அன்பு மார்க்கத்தினால்தான் சார். அப்புறம் சம்பல் கொள்ளைக்காரர்களை விநோபா - ஜெயப்பிரகாஷ் நாராயணன் வசப்படுத்தவில்லையா? அமெரிக்காவில் மார்ட்டின் லூதர் கிங்கின் சாதனைகள்... அன்னை தெரசா... இன்னும் நிறைய சொல்லலாம் சார்.

**நீங்கள் கேட்டவை - தராசு**

● என். ஆர். சுப்பிரமணியன், பூனாம்பாளையம்.

*? எஸ்.பி. சவான், ஜெயலலிதா இருவரில் யார் அரிச்சந்திரன்?*

! அந்த விஷயத்தில் இருவரும் அரைசந்திரன் கூட இல்லை.

● யோகஸ்ரீ ராஜ், பம்பாய்.

*? நம் பிரதமருக்கு தாஷ்கெண்ட் விமான நிலையத்தில் வழியனுப்பு விழாவின் போது இந்திய தேசியக் கொடி தலைகீழாகப் பறந்தது பற்றி உங்கள் கருத்து?*

! அதை விடவும் வருந்தத்தக்கது, இதையெல்லாம் கவனிக்க வேண்டிய, சம்பந்தப்பட்ட நம் அதிகாரிகள், இது ஒன்றும் பெரிய விஷயமேயில்லை என்பது போல் சூள் கொட்டி அலட்சியமாகப் பேசுவதாகும். தவறை ஒப்புக் கொள்ளத் துணிவில்லாதது, தவறு செய்வதை விடக் கேவலம்.

● பீ. அ. அஷ்ரப் அலி, தக்கலை.

*? 'மத தீவிரவாத சக்திகளுக்கு எதிராக தேசிய முன்னணியுடன் சேருவதில் 'ஜெ' ஆர்வம் காட்டவில்லை' என்று ஒரிசா முதல்வர் பிஜு பட்நாயக் கூறியிருக்கிறாரே?*



* ராஜினாமா மர்மம்



* தமிழக விஜயம்

! அவருடைய மாநிலத்தில் பட்டினிச் சாவுகளைத் தவிர்க்க முடியாதவர், இங்கு வந்து அம்மையாரின் ஐந்து நட்சத்திர ஓட்டல் விருந்துபசாரத்தை ஏற்றுத் திரும்பியதுடன் சரி. அவர் விஜயத்தால் வேறு ஒரு பயனும் இல்லை.

● ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

*? இ. காங்கிரஸ் மாநாட்டுக்கு மத்திய மந்திரிகள் ஆளுக்கோர் விமானத்தில் வருவதாக வெளியான செய்தி சாதனைதானே!*

! இந்த அக்கிரமத்தைத் தாங்க முடியாமல் தான் இயற்கையே சூறாவளியாகச் சீறி எழுந்து, அமேதியில் நிறுவப்பட்டிருந்த காங்கிரஸின் அட்டைக் கோட்டையைச் சரித்து, மாநாட்டையும் ஒத்திப் போடச் செய்து விட்டது போலும்! 10 கோடி நஷ்டம். ராவ் - அர்ஜுன்சிங் ஆதரவாளர்கள் மோதல் தாற்காலிகமாகத் தவிர்க்கப்பட்டது லாபம்.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
கே. சோமசேகர்,
5/138, VSKN நகர்,
காவேரிப்பட்டணம் - 635 112.

● எம். சந்திரசேகர், மேட்டுமகாதானபுரம்.

*? சமீபத்தில் நீங்கள் பார்த்த தமிழ் சினிமா பற்றி...?*

! ஒரு ஸி.ஐ.ஏ. ஏஜெண்ட். திருமணமான பிறகு மனைவி விருப்புக்கு இணங்க அந்த ஆபத்தான வேலையை விட்டு விட்டு, பேராசிரியராக லண்டன் வரும் இடத்தில், ஒரு நாட்டின் தலைவர் படுகொலை செய்யப்படுவதைப் பார்த்து விட, கொலைஞர்கள் தப்பி ஓட முடியாமல் தடுத்து, தண்டனை பெற்றுத் தருகிறான். கொலைஞர்கள் காவலிலிருந்து தப்பி, பேராசிரியரையும் குடும்பத்தையும் பழிவாங்க முற்பட, ஆவேசம் கொண்டு மீண்டும் ஸி.ஐ.ஏ.யில் சேர்ந்து, பயங்கரவாதிகளை வென்று... Patriot Games சீக்கிரமே தமிழில் தர்ஜுமா ஆகும்! கமல் அல்லது ரஜினிக்கு ரெடிமேட் ரோல்.

● பி. முத்துக்குமார், கும்பகோணம்.

*? கனகாபிஷேகம் தேவைதானா?*

! முற்றும் துறந்த நூறு வயதுக் கிழவர் என்ன செய்யப் போகிறார் அதை வைத்துக் கொண்டு! நற்பணிகளுக்குத்தான் பயனாக வேண்டும்.

● கே. சோமசேகர், காவேரிப்பட்டணம். ❑

*? எஸ். பி. சவான் மீது நேரடியாகக் குற்றம் சாட்டும் துணிச்சல் வேறு யாருக்கும் வராது என்கிறேன்...*

! துணிச்சல் மட்டும் ராஜதந்திரம் ஆகாது.

● தமிழழகன், திருச்சி.

*? கவர்னர் ராஜினாமா மர்மம் என்ன?*

! ஒரு மர்மமுமில்லை. ராஜீவ் மரணத்துக்குப் பிறகும், அதிலும் வர்மா கமிஷன் அறிக்கைக்குப் பின்னரும் ராஜினாமா செய்வதாக மத்தியில் சொன்னவர்தான். ஏற்காமல் தாமதித்து வந்த மத்திய அரசு, இப்போது அரசியல் சூழ்நிலை மாறவே ஏற்றுக் கொண்டு விட்டது. புதிய சூழ்நிலைக்கேற்ற வேறு ஒருவரை நியமித்து விட்டது. ஆக மொத்தம், ஆளுனர் பதவியின் கௌரவம் போயே போய் விட்டது.

* தேசிய விருது



* புத்துயிர்



# சிவாஜியின் அன்பும் எனது மரியாதையும்!

சௌகார் ஜானகி

ரமணா! அவன் தானே தன்னுடைய வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு விட்டான். அவன் இப்படிச் செய்ததில் தவறேதுமில்லை, ஆனாலும், ''அம்மா, நான் நம் கலாசாரத்துக்கேற்றபடி ஒரு பெண்ணையே திருமணம் செய்து கொள்ள விரும்புகிறேன். அத்தகைய பெண்ணைத் தேர்ந்தெடுக்கிற பொறுப்பையும் நீயே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். நீ எந்தப் பெண்ணைத் தேர்ந்தெடுத்தாலும் நான் மகிழ்ச்சியுடன் மணம் செய்து கொள்ளுவேன்'' என்று என்னிடம் கூறியதன் பேரில், நான் அவனுக்கு ஒரு பெண்ணை இங்கே தேர்ந்தெடுத்து வைத்திருந்தேன்.

தாய், என்ற முறையில் என் மகனின் செயலை என்னால் ஜீரணிக்க முடியவில்லை என்றாலும் அவனுடைய சந்தோஷம்தான் என் சந்தோஷம் என்று கருதி, மனத்தை ஒரு வாறு திடப்படுத்திக் கொண்டு, என் வாழ்த்துக்களைத் தெரிவித்தேன். அமெரிக்கப் பெண்ணைக் கட்டிக் கொள்ளாமல், குஜராத்திப் பெண்ணைத் தேர்ந்தெடுத்தானே என்று எனக்குச் சின்ன திருப்தி.

ரமணா எதையும் வெளிப்படையாகப் பேசிவிடுகிற சுபாவம் கொண்டவன் இல்லை. வார்த்தைகளை அளந்து பேசுகிற குணமுடையவன். திருமணம் முடிந்ததும், எனக்கு நீண்டதொரு கடிதம் எழுதியிருந்தான். ''அம்மா! உன் மகனான என்னைப் பற்றி ஏராளமான கனவுகளை நீ கொண்டிருக்கலாம். என் திருமணம் பற்றின என்னுடைய முடிவு உனக்கு ஏமாற்றமாக இருந்திருக்கும். ஆனால் நான் ஒன்றை மட்டும் தெளிவுபடுத்த விரும்புகிறேன். இந்த என்னுடைய செயல், நம் இருவருக்கும் இடையிலான தாய்-மகன் உறவை எந்த விதத்திலும் துளியும் பாதிக்காது. நான் உங்கள் மீது கொண்டிருக்கும் மரியாதையும், அன்பும் எப்போதும் குறையாது'' என்று அவன் எழுதியிருந்ததைப் படித்த போது, என் உணர்வுகளைத் துல்லியமாய்ப் புரிந்து கொண்டு என்னைச் சமாதானப் படுத்த அவன் எடுத்துக் கொண்ட முயற்சிகளைக் கண்டு நான் ஆறுதல் அடைந்தேன்.

''என் மருமகள், ஒரு குஜராத்திப் பெண் என்றாலும், எங்கள் குடும்பத்தினர் அனைவருடனும் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டு விட்டாள் என்பது குறித்து நான் சந்தோஷப்படுகிறேன். ரமணா - ராகினி தம்பதியின் மகன் ரிஷி. பதினோரு வயது ஆகிறது.

ரிஷி படிப்பில் கெட்டி. அவனுக்கு ஆங்கிலம் மட்டும்தான் தெரிகிறது. நல்ல வேளை இந்தப் பாட்டிக்கு ஆங்கில அறிவு இருக்கிறது - தன் பேரனுடன் சமமாய்ப் பேசிப் பழகும் அளவுக்கு. அமெரிக்காவில் சந்தோஷமாய் வாழ்ந்து கொண்டிருக்கும் இவர்கள், இந்தியாவிலிருந்து புறப்படும் போது, ரமணா என்னிடம் வாக்களித்தது போல், திரும்பி வந்து இங்கே செட்டில் ஆவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை.

என் மூன்றாவது குழந்தை சச்சி - பள்ளிப் படிப்பில் அவளுக்கு ரொம்ப ஆர்வம் இருக்கவில்லை. ஆனால் கார் ஓட்டவும், சமைக்கவும், நீந்தவும், ஆர்வத்துடன் கற்றுக் கொண்டாள். சமையலறைக்குள் புகுந்து கொண்டு கற்பனையும் கைத்திறனும் இழைய அவள் தயாரிக்கும் உணவு வகைகள் அசத்தலாக அமையும். புத்தகங்கள் படிப்பதிலும் சச்சிக்கு ரொம்ப ஆர்வம். நூற்றுக் கணக்கான புத்தகங்களை அவளுக்காக வாங்கித் தந்தேன்.

பொதுவாகவே, என் குழந்தைகள் என் பெயரை உபயோகித்துச் சலுகைகள் பெற முயற்சி செய்யக் கூடாது என்பதில் நான் மிகவும் கண்டிப்பாக இருந்தேன். அவ

ரவரும் சுய முயற்சியில் முன்னேற வேண்டும் என்ற எனது ஆவல்தான் இதற்குக் காரணம். சினிமா டிக்கெட் வாங்கக் கூட என் பெயரைப் பயன்படுத்தக்கூடாது என்று கண்டிப்பேன்.

ஆனாலும் 'சச்சி' அம்மா நீ எத்தனை பிரபலமான ஒரு பெண்மணி. உன் வயிற்றில் பிறந்ததை நான் பெருமையாய் நினைக்கிறேன். சௌகாரின் பெண் நான் என்று நான் சொல்லிக் கொள்வதில் என்ன தவறு? என்று என்னைக் கேட்பாள்.

என் பெண் சச்சி விரும்பியபடியே அவளுக்குத் திருமணம் செய்து வைத்தேன். எளியமுறையில் திருச்சானூரில்தான் திருமணம் நடந்தது. சென்னையில் நடந்த ரிசப்ஷனுக்கு ஏராளமான பிரமுகர்கள் வந்திருந்து வாழ்த்தினார்கள். ரிசப்ஷனுக்கு வந்த சிவாஜி, என் மகளுக்குப் பரிசளித்து வாழ்த்திவிட்டு, உடனே புறப்பட்டார். சாப்பிட்டு விட்டுப் போக வேண்டும் என்று நான் கேட்டுக் கொண்ட போது, ''இல்லை! என் அம்மா உடல் நிலை மிகவும் மோசமாக இருக்கிறது, எனவே, உடனே நான் புறப்பட வேண்டும்'' என்று கூறி விடை பெற்றார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் சிவாஜியின் தாயார் இறந்து விட்ட செய்தி திருமண மண்டபத்துக்கு வந்தது. வந்திருந்தவர்களை உபசரித்து விட்டு, பெண், மாப்பிள்ளை இருவரையும் வீட்டுக்கு அனுப்பி விட்டு மண்டபத்திலிருந்து நேராக சிவாஜி வீட்டுக்குப் போனேன்.

தாய் சீரியஸாக இருந்த போதும் சிவாஜி சார் என் மகளின் திருமண ரிசப்ஷனுக்கு வந்தாரெனில் அதற்குக் காரணம், அவர் என் பேரில் வைத்திருந்த அன்பு. அதே போல் ரிசப்ஷன் முடிந்ததும் நான் அவர் வீட்டுக்குப் போனேன் என்றால் அவர் பேரில் எனக்கிருந்த மரியாதையே காரணம்.

**ச**ச்சியின் கணவர் பெயர் ஸ்ரீநாத். பம்பாயில் பாங்கில் உயரதிகாரியாக இருந்தார். மாப்பிள்ளையின் தந்தை டாக்டர் டி.என். ராவ், மிகச் சிறந்த கல்வியாளர். மலேசிய அரசில் பணிபுரிந்தவர். தாய் த்வேதுலா விசாலாட்சி பிரபலமான எழுத்தாளர். அவர்களின் ஒரே மகன் ஸ்ரீநாத்.

ஓர் ஆச்சரியம் என்னவென்றால், நாங்கள் சம்பந்தியாகப் போகிறோம் என்று தெரியாத போதே என் சம்பந்தி அம்மாள் எழுதிய ஒரு கதை ரெண்டு குடும்பால கதா (இரண்டு குடும்பங்களின் கதை) என்ற பெயரில் திரைப்படமாக்கப்பட்டபோது, அதில் நான் ஹீரோயினாக நடித்திருக்கிறேன். தனக்குக் குழந்தையில்லாத காரணத்தால், தன் கணவரின் தம்பியை அன்பைப் பொழிந்து வளர்க்கும் கதாபாத்திரம். எனக்கு ஆழமான கேரக்டர். டைரக்ஷன் சி.எஸ். ராவ்.

**மா**ப்பிள்ளை ஸ்ரீநாத் லண்டனுக்கு டிரான்ஸ்ஃபர் ஆகிப் போனபோது, சச்சியும் அவர்களின் நாலு வயதுக் குழந்தை சஞ்சய்யும் உடன் போனார்கள். லண்டனில் சந்தோஷமாய் வாழ்ந்து கொண்டிருந்த போது, அடிக்கடி ''நீங்க குழந்தைகளுக்காக உழைத்தது போதும், இன்னும் எத்தனை நாள் தனிமையிலே இருக்கப் போறீங்க? பேசாமல் எங்களுடன் வந்து தங்கிடுங்க'' என்று அழைப்பார் மாப்பிள்ளை. யாருக்கும் பாரமாக வாழ விரும்பாத நான் அதற்கு உடன்படவில்லை. ஆகவே, என் மாப்பிள்ளையே நேரே வந்து என்னிடம் பேசி என் மனத்தை மாற்றி அழைத்துச் செல்லும் நோக்கத்துடன்



* மகள், மருமகன், பேரன்.....

1978 நவம்பர் 26 இந்தியாவுக்கு வருவதாய் இருந்தார்.

22 - ம் தேதி லண்டனிலிருந்து என்னுடன் பேசினார். 24 - ம் தேதி 'ராவணனே ராமன் ஆனால்....' என்ற தாசரி நாராயண ராவ் படத்தின் ஷூட்டிங்கில் இருந்த போது, லண்டனிலிருந்து என் வீட்டுக்கு டெலிபோன் வந்தது. உணவு இடைவேளையின் போது வீட்டுக்கு வந்த நான் லண்டனுக்கு டெலிபோன் செய்தேன் - எந்த பிளைட்டில் மாப்பிள்ளை வரப்போகிறார் என்ற தகவலை அறிந்து கொள்ளும் ஆர்வத்தில். மறுமுனையில் பேசிய சச்சி சொன்ன தகவலைக் கேட்டு, கீழே சாய்ந்தேன்.

(தொடரும்)






* கனில்மோட்வானி

* இந்தியாவிலேயே பெரிய...

# 21-ஆம் நூற்றாண்டு சூப்பர் மார்க்கெட்!

ஷாப்பிங் அனுபவத்தை மகிழ்ச்சியான விஷயமாக நினைக்கும் எவருக்கும், பிரிகேட் ரோடு மோத்தா சூப்பர் மார்க்கெட், நிச்சயம் ஒரு சூப்பர் அனுபவத்தைத் தரும்.

''இந்தியாவிலேயே இதுதான் மிகப் பெரிய சூப்பர் மார்க்கெட். மொத்தம் முப்பத்தாறாயிரம் சதுர அடி!'' என்கிறார் கனில் மோட்வானி. பம்பாய்க்காரரான இவரது மாமா கே.கே. மோட்வானி இதை உருவாக்கினாராம்.

தளங்களில் எல்லாம் எஸ்கலேட்டர்கள். மேலேயும் கீழேயும் போய் வர கண்ணாடிக் கூண்டு போன்ற காப்ஸ்யூல் லிஃப்ட்டுகள் வேறு. வழவழவென்று வண்ணமயமான கிரானைட் கற்கள் பதித்த தரை. தூய்மை என்றால் அப்படி ஒரு தூய்மை; துடைத்துத் துடைத்து வைத்து இருக்கிறார்கள். நாலாபுறமும் ஒளிபாய்ச்சும் ஸ்பாட் லைட்டுகள். பசுமைக்குச் செடி கொடிகள். குழந்தைகள் குதூகலத்துடன் கும்மாளமிட விளையாட்டுப் பொம்மைகள்.

''நாங்கள் ஐந்து சகோதரர்கள் ஒன்று விட்ட சகோதரர் உட்பட - பராமரிப்பில் அதிகக் கவனம் செலுத்துகிறோம். மற்ற சூப்பர் மார்க்கெட்டுகளில் கையைக் கூட அப்படி இப்படி நீட்ட முடியாது. இங்கே எப்படி தாராளமாக இருக்கிறது பாருங்கள்!'' என்கிறார் கனில்.

பார்த்தாலே வாங்கத் தூண்டுகிற மாதிரி வகை வகையாகப் பொருட்களை அடுக்கியிருக்கும் நேர்த்தி. ஷாப்பிங்கின் போது பார்த்து ரசிக்க டஜன் கணக்கில் டீவி. எல்லாத் தளங்களிலும் மெலிதாக இழையோடும் இசை. ''மற்ற சூப்பர் மார்க்கெட்டுகளை விட விலைகள் இங்கே குறைவாக வேண்டுமானால் இருக்குமே தவிர, கூட இருக்காது!'' என்கிறார் கனில். ''ஆயிரத்து நூறு ரூபாய் விலையுள்ள பெர்ஃப்யூம் கூட இங்கே உண்டு!''

ஷாப்பிங் செய்ய வருகிறவர்களுக்கு வசதி. வெறுமனே சுற்றிப் பார்த்துப் பிரமித்து மகிழ வருகிறவர்களுக்குப் பொழுது போக்கு!

- எஸ்.வி.என்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

